" WHAT INDIA WANTED AT PRESENT WAS A RELIGION OF POWER. "

*Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith.'*

" *Seek Truth wherever you can find it,*" *But,* "*Make your choice and stick to it till you reach the End.*"

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

'HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."

EDUCATIONAL AND SOCIAL



அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம் தத்ஸத்.] [God is Love : Knowledge is Power : *Aum*

**"New Series"** ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.** **"Approved"**

புத்தகம். **24.**] நளஹூ ஆடிமீ, **1916**ஹூ ஜூலைமீ [சஞ்சிகை **4.**

## " THE IMMEDIATE NEED FOR INDIA "

SIR JOHN WOODROFFE ON INDIAN STUDENTS.

The Hon'ble Justice Sir Woodroffe presided on Saturday at the sixth anniversary meeting of the Calcutta Friends' Sunrise Literary Club, held in the Bharat Sangit Samaj and made an interesting speech. He thanked them for the honour they had done him and said he had not hitherto generally presided at meetings as he had other work to do. This was doubtless social service, but one could not render it in all kinds. However, the solicitation of a friend and interest in the student had brought him there that day, the more readily that the students had lately been severely spoken of. He felt more happy when in the company of students than in most places for youth with its *balbuddhi*, to which their Sanskrit address referred, was both sincere and hopeful—two qualities which a large number of people lost as they grew up through their ambitions and disillusions. Only a week ago an Indian friend (perhaps under the influence of the abnormal heat) had said to him : "This is a dead country," to which he replied. "Only those who are dead believe themselves to be so" and asked : "Is the Indian student dead ?" His friend had to admit that his hopes were there. But he (Sir John Woodroffe) said his confidence was there. The students had been much criticised of late, but if he judged them right they would not be depressed over it. For himself he was not alarmed at their condition Nothing in the world was perfect nor wholly worthless as the Sanskrit proverb ran. Every good quality carries with it the liability to certain defects. The broad way of looking at matters was to see whether the qualities outweighed the defects.

The students had faults (who has not ?), but these were connected with certain qualities of energy and self-respect which they had acquired and which are in themselves praiseworthy. Of course all wished the defects away, but speaking for himself he would rather they had these faults than that they should be torpid, servile and lacking in self-respect. For himself he saw in the students the commencement of a future of great worth. He was glad to hear that the students had got up the Club themselves. This showed activity and independence, and that it was not merely one of those ponds which well meaning persons had made in order that they might more easily angle for the young idea. They should, however, have a definite notion of what they intended to do. This and other Indian clubs should be centres of Indian life and thought and generators of Indian power. The world was a manifestation of divine power (Shakti) and each man was himself a centre of it being a fragment (Angsha) of that great Power. They must be true to the lines on which by the divine imagining (Kalpana) they had been laid. That is they must also, like human artists do, work to type.

This meant they must not imitate any foreign people, but be Indian, and shape themselves as such by the study of the literature, art, philosophy and religion of their ancestors. As they knew they owed a debt to the Pitris, who would not give their aid if ignored. Each must be true to himself and his type. But as they asked respect for themselves they must give it to others who might rightly incite them to develop new qualities in themselves in forms conformable to their own type and nature. But this was a different thing to putting on second-hand clothes borrowed from the shop of servile imitation. He had recently read a prospectus of studies for an Indian school in which there was not a single item which showed that the boys were Indian. By all means let them learn about and be helped by the example of other countries, *but do not forget their own. If they took what others could give let them assimilate it so that it became not others but their own.* In this way the fire of the Indian spirit would burn, and the more intensely by the fuel it fed on. There would then be an Indian Homa fed with what was of worth gathered elsewhere. Each should thus realise himself as a centre of Power and firmly will their own good and that of their country. *What India wanted at present was a religion of Power. The other side of the Spirit she knew better than any. By power he did not mean merely physical force.* He was glad to say that every day such advice as he had to give became less necessary. Much progress had been made towards self-realization during the quarter of a century in which it had been his privilege to live in this sacred country. He was always endeavouring to read the future of it, and nowhere could it be with more certainty read than in the minds and bodies of the Indian student. *In the world-play let theirs be a truly Indian part.* He concluded with the Sanskrit Mantra said by teacher and disciple before study of the Vedas which he said was a fit prayer for all students and moreover their very own : "May God protect us both. May He grant to us both aid. May we two work with all our strength. May our study be with understanding. May there be no dissension between us."—*The Bombay Chronicle.*

---

### Civilization—Ancient and Modern.

"The pandemonium that is going on in Europe shows that modern civilization represents forces of evil and darkness whereas the ancient, *i.e.*, Indian civilization, represents in its essence the divine force. Modern civilization is chiefly materialistic as ours is spiritual. Modern civilization occupies itself in the investigation of the laws of matter and employs the human ingenuity in inventing or discovering means of production and weapons of destruction ; Ours is chiefly occupied in exploring spiritual laws. Our Shastras lay down unequivocally that a proper observance of truth, chastity, scrupulous regard for all life, abstention from coveting other's possessions and refusal to hoard anything but what is necessary for our daily wants, is indispensable for a right life ; that without it a knowledge of the divine element is an impossibility."—MR. M. K. GANDHI *at the 'Gurukula' Anniversary.*

---

THE VIVEKA CHINTAMANI.—We have received the first three numbersof the new volume which begins from April last and find them maintaining their usual high level of excellence. It is needless to say much on the consistent and strenuous endeavours of the journal for the cause of children's education. It deserves to be widely patronised by all educational institutions and lovers of education.—*The "Hindu" dated 28th June* 1916.

புஸ்தகம்-24.] [சஞ்சிகை-4

"The Children's Favourite, the Teachers' Help, and the Parents' Guide."

நளவூ ஆடிமீ



# விவேக சிந்தாமணி

July-August 1916.

ESTABLISHED 1892

"பெற்றோர்கள் தாழவப்பர் பிள்ளைகளி லாசையுள்ளோர்
கற்றே மெனவுகந்து கற்பர் பின்னும்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னெஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

## "THE IMMEDIATE NEED FOR INDIA."

## இந்தியாவுக்கு இப்பொழுது அத்யாவசியமாக வேண்டியதென்ன!

"*In general terms a proper religious spirit is the greatest and most immediate need*" *for India.*—MR. M. K. GANDHI.

"*What India wanted at present was a religion of Power. The other Side of the Spirit she knew better than any. By power he did not mean merely physical force.*"—SIR JOHN WOODROFFE.

ஐரோப்பாமுழுவதும் அமர்க்களமாகி ஒருவரையொருவர் ஹதம்செய்யக் கங்கணம்கட்டி ஏராளமான உயிர்கள் அமர்க்களத்தில் நஷ்டமாவதன்றி பொருள்நஷ்டமும் ஆய்க்கொண்டு வருவது எல்லாருக்கும் யோசனையை உண்டு பண்ணி வருகிறது. "வல்லான் வகுத்தது வாய்க்கால்" என்றபடி தேஹபலமும் சைனிய பலமும் உடையஜாதியார் தாங்கள் இட்டதே சட்டமாக நடைபெற வேண்டுமென்று துணிந்து அசுரபாவங்கொண்டு எல்லாரையும் தங்களுடைய சம்பத்துக்குதவும் ஊழியர்களாக்கிக் கொள்ள யத்னித்தது அநர்த்தமாய் முடிந்திருக்கிறது யாவருமறிந்த விஷயம்.

இப்படி ஜீவகாருண்யமின்றி காட்டுமிருகங்களை வேட்டையாடுவதுபோல் ஜனங்களையும் நாடு நகர்களையும் வேட்டையாடி யழித்து அஹம்பாவம் மிகுந்து ஸ்வநலமொன்றையே சிந்தித்துக் காரியசாதனை செய்துவருவது "கெடுவான் கேடுநினைப்பான்" என்றபடி பிறர்க்குக்கேடாய் முடிவதன்றி தனக்கும் கேடு விளைப்பதாயிருக்கிறது என்பது ஸ்பஷ்டமாய் விளங்குகிறது. ஆதலால் இந்தப் பாரதப் போரில் சம்பந்தப்பட்ட எல்லாரும் மற்றவர்களும் இப்போருக்குப் பின் இவ்விதமான கேடு நேரிடாதபடி ஜனசமூகத்தையும் துரைத்தன ஏற்பாட்டையும் சீர்திருத்தி ஜனக்ஷேமத்துக்கு அநுகுணமாகவுள்ள வழியில் ப்ரவிருத்தி யுண்டாகும்படி பார்க்கவேண்டுமென்று சிந்தித்து வருகிறார்கள். இந்தச்சிந்தனை இந்தியர்களாகிய நம்மவர்களுக்குமுண்டு. சீர்திருத்தக்காரர்கள் சீர்திருத்தங்களின் மேல் கண்ணாயிருக்கிறார்கள். சண்டைக்காரர்கள் சண்டைக்கு முஸ்தியாயிருப்பதே வழியென்கிறார்கள். சோம்பேறிகள் (தாமஸகுணமிகுந்தவர்கள்) "யார்வந்தால் என்ன? நமது கஷ்டங்களும் நஷ்டங்களும் நம்மோடே! நமக்குக் கதிமோக்ஷமில்லை" யென்று மனம்சோர்ந்து மங்கிக் கிடக்கிறார்கள்.

இந்தச் சமயத்தில் திரிகாலத்தையும் சிந்தித்து முன்னதற்குப்பின் முரணாமலும் இனி வருவதற்கு ஏற்றபடி இப்பொழுதே நமக்கு வேண்டிய சாதகங்களைத் தேடிக்கொள்ள வேண்டுமென்று வருமுன்காப்போனைப்போல் முன்யோசனை செய்கிறவர்கள் அபிப்பிராயம் என்னமாயிருக்கிறதென்று தேர்ந்துணர்வது நலம். அது அவசியமுமாகும். இப்படிச் சமஷ்டி நலம்கோறி ஆலோசனைசெய்து உண்மையை உரைக்கத்தக்கவர்கள் முனிகளும்

இருஷிகளுமே ஆவர். முனிகள் என்றால் தீரத்தெளிய மனதை யடக்கியாண்டு சிந்திக்கத் தக்கவர்கள். இவர்களை "Thinkers" என்றுசொல்லுவர். இருஷிகள் என்போர் வாக்குமனம் கடந்துள்ளவிடத்தில் உண்மையை உள்ளபடி பிரத்தியக்ஷ சாக்ஷாத்காரமாய்ப் பார்த்து அதனல் "பார்ப்பான்" (Seers) என்று பேர்பெற்றவர்கள். இவர்கள்தான் த்ரிகாலஞானிகள் என்னப்படுவர். திரிகால சிந்தனைக்கும் திரிகால ஞானத்துக்கும் உள்ள வித்தியாசம் என்னவெனில்: திரிகாலசிந்தனை காலவந்தனைத்துக் குள்பட்டதுவும் திரிகால ஞானம் காலவஞ்சனத்துக் குள்பட்டதுவு மென்று சொல்லலாம். அதாவது,

ஒன்று காலதேச வர்த்தமானங்களுக்குள் பட்டு அவைகளைக்கொண்டு தானே தீரத் தெளிந்து துணிந்து நடத்தலுக்கு சாதகமாகும்.

மற்றொன்று காலதேச வர்த்தமானங்களுக்கப்பால் ஸநாதநமாயுள்ள தர்மத்தையுணர்ந்து உணர்ந்தபடி ஸ்வாநுபவத்தில் சாக்ஷாத்கரித்து அதனாலுண்டாகும் நைஷ்கர்மவித்தியினுல் உலகுய்யக் கர்மத்தி லீடுபட்டவர்போல் காட்டி கர்மதர்மமுணர்த்தி நல்வழிகாட்டி நயம்பட உண்மையை உரைப்பாராவர்.

இப்படி முனிகளும் (Thinkers), இருஷிகளும் (Seers) காட்டும்வழியை யனுசரித்து நடக்க கர்மவழியிலிறங்கி கர்மபந்தத்தைக் கடந்தவர்களான கர்மயோகிகளும் இருக்கவேண்டும். இம்மூவரும் மற்றவர்களுக்கு வழிகாட்டிகளாவார்கள். இவர்களுக்குச் சமஷ்டிசேவையே பூஜை. சமஷ்டி தர்மமேசட்டம். சமஷ்டி யோகக்ஷேமமே ஐசுவரியம். இம்மூவர்களும் இல்லாத நாடு தட்டுத் தடுமாறிக்கொண்டும் இடறி விழுந்துக்கொண்டும்தான் செல்லவேண்டும்.

"TO THINE OWN SELF BE TRUE."

"ஸ்வதர்மத்தைக் கைவிடாதே."

யாரும்—பிரத்தியேக நபர்களாயினும் சரி, சமஷ்டி ஜனசமூகமாகிய தேசத்தாராயினும் சரி, ஸ்வதர்மத்துக்கு விருத்தமாய் நடக்கக் கூடாது. ஏனெனில் எள்ளுப்போட்டால் கொள்ளுமுளைக்காது. அதுபோல யாரும் பிராகிருதத்தில் இயற்கை தர்மத்துக்கு விரோதமாக நடக்கமுடியாது.

சமஷ்டி-வியஷ்டி பேதம் பாவனுமாத்தித்திற் குண்டேயன்றி, தர்ம சம்பந்தப்பட்டமட்டில் பேதமே கிடையாது. அது எப்படியென்றால் தோப்பும் மரமும் பாவனையில் பேதப்படுமேயன்றி, பீஜாங்குர தர்மத்திலாவது வளர்ச்சிதர்மத்திலாவது பேதம் சிறிதும் காணப்படமாட்டாது. வித்துப்போலவே முளையும் இருக்கும். ஒருவித்திலிருந்து கிளம்பும்முளை அந்த ஜாதியின் தர்மத்தை யனுசரித்திருப்பது போல ஒருதோப்பு முழுவதிலுமுள்ள மரங்களும் வித்துக்களும் அதேமாதிரி அததன் ஜாதியின் தர்மத்தை யனுசரித்தேயிருக்கும். எள்ளுப்போட்டால் கொள்ளு முளைக்காதது போல, எள்ளையும் கொள்ளையும் கலந்து விதைத்தாலும் அப்போதும் அதே தர்மம்தான் விளங்கும். பீஜக்கலப்பினுல் அங்குரம் (முளை) தன் ஸ்வதர்மம்விட்டுப் பிசகாது. அதுபோலவே ஒவ்வொரு தேசத்தாரும் அத்தேசத்திலுள்ள ஒவ்வொரு ஜாதிவர்ணத்தாரும் அவரவர்கள் ஸ்வதர்மத்தை யனுசரித்து நடக்க வேண்டும். அப்பொழுதுதான் அவர்கள் முயற்சி பலனைத்தரும். ஸ்வதர்மத்தை வளர்ப்பதென்றாலும் "They must work to type" என்றாலும் இரண்டும் ஒன்றுதான். பீஜத்தில் (வித்தில்) மறைந்திருக்கும் மரத்தின் உருவம் எதுவோ அதுவே அந்த வித்தினின்றும வெளியாவது ஸ்வதர்மம் (working to type or being true to type). இதை ஸர் ஜான் வூட்ராப் அவர்கள் நன்றாக வற்புறுத்திக் கூறியிருக்கிறார். வான்கோழி மயிலாகாதது போலவும் புலித்தோல்போற்றிய கழுதை புலியாகாததுபோலவும் ஸ்வதர்ம விருத்தமான முயற்சி கர்மதர்மத்துக்கு விரோதமாயிருக்கிற காரணத்தினுல் தர்மபலனைக் கொடுக்காது.

"பிள்ளையார்பிடிக்க குரங்காய்முடிந்தது" என்றது இதற்கே சொல்கிறது. ஸ்வதர்மத்துக்கு விரோதமான முயற்சி "நினைத்தது முடிக்கும் ஆற்றலை" உண்டுபண்ணுது வில்லங்கத்தையே உண்டுபண்ணும். அதாவது இடையில் விக்கினங்களை நிவர்த்திக்கச் சக்தியற்றதாய் மேன் மேலும் விக்கினங்களை யுண்டுபண்ணுவதாகும். நிர்விக்கினமாக ஒரு காரியத்தைச் செய்து முடிக்க வேண்டின் ஸ்வதர்மத்துக்கு விரோதமின்றி முயற்சிக்கவேண்டும். விரோதப்பட்டால் இயற்கைவிரோதம் நேரிடுவதால் நாம் எதிர்பாராத விக்கினங்களெல்லாம் நேர்ந்து நாம் எண்ணினது எண்ணினபடி நிறைவேறுது. நாமொன்று நினைக்க அது வொன்ருகமுடியும். இது இந்த மகாபாரதப்போரில் ஜெர்மானியர் விஷயத்தில் பிரத்தியக்ஷமாக விளங்கியது "விவேக சிந்தாமணி யுத்தகாண்டத்தை" வாசித்துள்ள எல்லாருக்கும் விளங்கும். ஆகையால் சமஷ்டி-வியஷ்டி யிரண்டிற்கும், தர்மம் ஒன்றே. தர்ம பேதமில்லாதவிடத்துக் கர்மபேதம் உண்டாகக் கற்பிப்பது சணப்பன்வீட்டுக் கோழி போல் வீணுகத் தானே விலங்கிட்டுக் கொள்ளுவதாகும். ஆகையால் கர்மம்,தர்மம் ஆகிய இரண்டிற்குமுள்ள இயற்கை உறவு மறக்கக்கூடாதது. அதற்குத்தான் ஸ்வதர்மம் என்று சொல்கிறது. அந்த ஸ்வதர்மத்தையறிந்து அனுஷ்டிப்பதற்குச் சாதனமாக ஏற்பட்டது "வர்ணுச்ரம தர்மம்." இந்த "வர்ணுச்ரமதர்மத்தை" அனுசரிக்கிறவர்கள் இலகுவில்தானே (சுலபமாக) ஸநாதநதர்மத்தின் மர்மத்தை யுணர்வார்கள். எப்படியென்ருல் ஒருஜாதி வித்தைப் பயிர் செய்கிறவன் பயிரின் செழுப்பினுல் தன் உழைப்பின் பலனை யனுபவிப்பதோடு வித்திலிருந்து முளைகிளப்புகிற பொதுதர்மத்தையும் நன்ருக உணர்கிறுன். உழைப்புக்குத் தக்க கூலி இகத்துக்கேற்ற சாதனமென்றும், பிரதிபலனை நாடாதுழைக்கும் உழைப்பு ஸநாதநமான தர்மத்தை விளக்குவதால் அது பரசாதனமென்றும் சொல்லப்படும். ஆதலால் ஸ்வதர்மத்துக்கு விரோதமின்றி யுழைப்பது இகபரசாதன மிரண்டையுமளிக்கும். ஆதலால் தான் கிருஷ்ணபகவான் அர்ச்சுனனுக்கு ஸ்வதர்மானுசரணை வேண்டுமென்று அதன் முக்கியத்தை வற்புறுத்திப் போதித்தார். அதையே தான் ஸர் ஜான் வூட்ராப் அவர்களும் உள்ளபடி கிரகித்து இக்காலத்துக்கேற்றதாய் இந்திய மாணவர்க் குபதேசித்திருக்கிருர். மிஸ்டர் எம். கே. காந்தியவர்களும் குருகுலபாடசாலை வருஷோற்சவகாலத்தில் பேசினபோது இந்தியாவுக்குத் தற்காலம் அவசியமாகவேண்டியது என்னவெனில் "சரியான மதசிந்தனை"—"a proper religions Spirit" என்று சொன்னுர்.

சரியான மதசிந்தனை.

சரியானமதம் எக்காலத்தும் எத்தேசத்தும் எல்லாருக்கும் சாசுவதமாயுள்ள உண்மை யொன்றெதுவோ அதையே போதிப்பதாகும். அதற்கு ஸத்தியமதம் என்றும் பேருண்டு. அந்த ஸத்தியமதசிந்தனை ஸத்தியத்தையே பெறச்செய்யும். எனெனில் "யத்பாவம் தத்பவதி" என்பது மனேதர்மம். ஸத்தியமாயுள்ளது (அழியாததாயுள்ளது) ஆத்மா என்று சொல்லும் அறிவு ஒன்றே. அந்த அறிவைப் பெற்றனுபவிக்க உழைப்பதே உண்மைத் தர்மத்தின்முடிவும் ஸத்தியமதத்தின் பலனுமாகவிருக்கிறது. ஜடசக்தியிலும் ஜீவசக்தி பெரியது. ஜீவசக்தியிலும் ஆத்மசக்தி பெரியது. ஜடப்பொருளில் அறிவு (ஆத்மா) துயில் கொண்டிருக்கும். ஜீவப்பொருளில் அறிவு (ஆத்மா) ஸ்வப்னஸ்திதியிலிருக்கும். இச்சாமாத்திரமாக விளங்கும் ஸ்வாத்மக ஸ்வரூபத்திலோ (ஆத்மா) அறிவு விழித்திருந்து லீலை செய்யும். அதனுடைய லீலையினுல் "ஆக்கியதனைத்தும் ஆயது அதனுல்." அப்படிப்பட்ட மதசிந்தனையிருந்தால் உலகத்தில் யாருக்கும் பயப்பட வேண்டியதில்லை. "Cultivate Will-Power" என்று சொன்னுலும் "ஆத்மசிந்தனையோடு இரு" என்று சொன்னுலும் இரண்

டும் ஒன்றே ஆகையால் இந்தியாவுக்கு இப்பொழுது அத்யாவசியமாக வேண்டியது இந்த சக்தியைவளர்த்து விளங்கச்செய்யும் மதமே. இந்தச்சக்தி விளங்கப்பெற்ருல் அந்த பாக்கியம் பெற்றவர் "நாவசைய நாடசையும்" என்பது உண்மையாக சித்திக்கும். அவர்களே இந்தியாவுக்கு வழிகாட்டிகளாவார்கள் என்பது உண்மை ஞானமுள்ள ஆங்கிலேயர்கள் இந்தியர்கள் இருதாத்தாருடைய அபிப்பிராயமும் என்பதுவிளங்க ஸர் ஜான் வூட்ராப் அவர்களுடைய உபதேச மொழியையும் மிஸ்டர் எம். கே. காந்தியவர்களுடைய சித்தாந்தமான அபிப்பிராயத்தையும் மேலேயெடுத்து விளக்கியிருக்கிறோம்.

---

## FACILITIES FOR TRAINING OF MEDICAL STUDENTS IN RURAL AREAS.

## நாட்டுப்புறத்தில் வைத்தியாப்பியாசம் செய்வோர்க்கு வைத்திய பாடசாலை.

1916ளு ஜுலைமீ 1உ முதல் சென்னை கவர்ன்மெண்டார் நாட்டுப்புறத்தில் வைத்தியாப்பியாஸம் செய்வோர்க்குச் சாதகமாக கள்ளிக்கோட்டையில் ஒரு புதிய "மெடிகல் ஸ்கூல்" ஏற்படுத்தியிருக்கிறார்கள். சென்னையிலுள்ள இராயபுரம் மெடிகல் ஸ்கூலில் வழக்கமாகச் சேர்த்துக்கொள்கிற தொகையைவிட இன்னும் 30 பேர்களை அதிகமாகச் சேர்த்துக்கொள்ள ஏற்பாடு செய்திருக்கிறார்கள். தஞ்சாவூர், விசாகப்பட்டணம் மெடிகல் ஸ்கூல்களை விர்த்திசெய்ய உத்தேசித்தும் யுத்தமுடக்கடியினல் தற்காலம் சாத்தியப்படவில்லை. ஆனாலும் அதைப்பற்றி யோசித்துக் கொண்டிருக்கிறார்கள். இச்சென்னை இராஜதானியில் இப்பொழுது நான்கு மெடிகல் ஸ்கூல்கள் இருக்கின்றன. இந்த நான்கு வைத்திய பாடசாலைகளிலும் இப்பொழுது 200 மாணாக்கர்கள் வைத்தியம் கற்றுக் கொள்ள சாதகம் ஏற்பட்டிருக்கிறது. ஏப்ரல்மீ 7உ கூடிய சட்டநிரூபணசபையில் இது விஷயமாய் கொண்டுவந்த ஒரு தீர்மானத்தை கவர்ன்மெண்டார் ஏற்றுக்கொண்டதின்மேல் இந்தமாதிரி அதிகப்படி சாதனங்கள் அளிக்க ஏற்பாடு செய்யலானார்களென்று ஜுலைமீ 9உ யன்று சமாசாரம் தெரிவித்திருக்கிறார்கள்.

## SIR JOHN WOODROFFE ON INDIAN STUDENTS.

## நமது வாலிபர்களாகிய மாணவர்களைப் பற்றி ஸர்ஜான் வூட்ராப் சொல்லியது.

ஸர்ஜான் வூட்ராப் அவர்கள் கல்கத்தா ஹைகோர்ட்டு ஜட்ஜிகளில் பிரக்கியாதி பெற்ற ஒருவர். அவர் சென்ற ஜுன்மீ கல்கத்தாவிலுள்ள மாணவர் சங்கம் ஒன்றின் வருஷோற்சவத்தன்று அக்கிராசனம் வகித்தபொழுது நமது வாலிபர்களாகிய மாணவர்களைப்பற்றி அவருடைய அபிப்பிராயத்தை வெளியிட்டுப் பேசினர். அது உண்மை நிறைந்துள்ள உத்தம உபதேசமாக விருப்பதால் அவருடைய உபதேச மொழிகளை எல்லாரும் கேட்டுப் பயன்படும்படி கீழே யெடுத்துரைக்கிறோம்.

அந்த மாணவர் சங்கத்தின் பேர் "Calcutta Friends' Sunrise Club"—கல்கத்தா நேசர்கள் அருணோதய சங்கம். அவர்கள் கூட்டம் கூடிய இடம்: பாரத சங்கீத சமாஜ மாளிகை. இப்படிப்பட்ட கூட்டங்களில் அவர் அக்கிராசனம் வகித்ததில்லை. ஏனெனில் அவருக்கு வேறுள்ள வேலைகள் இதற்கு அவகாசம் கொடுப்பதில்லை. ஆயினும் ஒரு நேசர் வற்புறுத்தியதின்பேரிலும் அவருக்குச் சிறுவர்களிடத்திலுள்ள இயல்பான அன்பினாலும் அந்தக் கூட்டத்திற்கு அக்கிராசனாதிபதியாக விருக்கும் பொறுப்பை வகிக்கச் சம்மதித்தார். தன்னை அக்கிராசனம் வகிக்கச் சொன்னதற்காக வந்தனங்கூறி அவர் அங்கே வந்ததற்கு மற்றொரு காரணமாகக் கல்கத்தா மாணவர்களைப்பற்றிக் கடுமையாகச் சமீபத்தில் சிலர் பேசியதைக் குறிப்பிட்டுக் கூறினர்.

"குழந்தையும்தெய்வமும் கொண்டாமிடத்தில்" என்பது பழமொழி. அப்படியென்றால் தெய்வம் உண்டென்று கொண்டாடுகிறவர்களுக்கு பிரத்தியக்ஷமாய் உளனாகவும், இல்லையென்று மறுக்கும் நாஸ்திகர்க்கு ஒளித்து இலனாகவும் தோன்றும் இலக்ஷணம் போலக்

குழந்தைகளும் அவர்களுடைய மாசற்ற தன்மையை யறிந்து கொண்டாடுகிறவர்களுக்கு சம்பத்துக் காரணமாகவும் மற்றவர்களுக்கு விபத்து ரூபமாகவு மிருக்கிறார்களென்பது அர்த்தம். குழந்தையை அறிந்து வளர்ப்பது தெய்வத்தை யறிந்து வணங்குவதுபோல் மிகவும் கஷ்டசாத்தியமான உத்தம வித்தை யென்றும் அர்த்தம் கொள்ளும். "பாலபுத்தி ஞாலத்திற் சீலம்." இந்த நிலவுலகில் மேன்மை பெற்று விளங்குவது பாலபுத்தி (Child Mind). பாலபுத்தி யென்றாலும் குழந்தைமனம் என்றாலும் ஒன்றே.

"BALABUDHI WAS BOTH SINCERE AND HOPEFUL"

"குழந்தைமனம் கோணாது"

பாலபுத்திக்கு அவர் இரண்டு உத்தம லக்ஷணங்கள் சொன்னார். ஒன்று (Sincerity) உண்மைக்குணம்; மற்றொன்று: (Hopefulness) மனவெழுச்சி அல்லது சித்திஸாதனம். "எண்ணினேன் எண்ணமிது ஸ்வாமி" என்றார் போல குழந்தைகள் எண்ணம் உண்மைக்குண விசேஷத்தால் ஸித்திஸாதனமாக விருக்கிறது. "சங்கல்பம் வீண்போகாது" என்பது ஒரு மேலான உண்மையைக் குறிக்கும் மூதுரை. சங்கல்பம் என்றாலும் நினைவு என்றாலும் எண்ணம் என்றாலும் ஒன்றே. இவ்விரு குணங்களும் பாலபுத்திக்குள்ள லக்ஷணங்கள். சித்தசுத்தி விசேஷத்தால் அவை உத்தம லக்ஷணங்களாக அமைந்து மனவெழுச்சியை யுண்டுபண்ணுகிறது. மனவெழுச்சிக்குத் தான் Hopefulness என்று சொல்கிறது. மனம் என்பது நினைப்பும் மறப்புமே தொழிலா யிருக்கப்பட்ட ஒரு கருவி. மறப்பிலா நினைப்பு ஸித்திசாதனம் ஆகும். அது உயிர்க்கு உவமையுமாகும். நினைப்பிலா மறப்போ மரணத்துக்கு உவமானமாகும். ஆதலால் தான் பெரியோர் "நினைப்பும் மறப்பும் பிறப்பும் இறப்புமாம்" என்று கூறியிருக்கிறார்கள். உண்மைக் குணமுள்ள விடத்தில் மனவெழுச்சியும் கூடவேயிருக்கும். இவ்விரு லக்ஷணங்கள் பாலபுத்திக்கு இயற்கையாக அமைந்துள்ளவை. வயதாக ஆகப் பெரும்பாலார் ஆசைப்பட்டு மோசம்போய் அறிவிழந்து போவதால் புத்தி சூக்ஷ்மம் கெட்டு அதன் பால லக்ஷணங்களை யிழந்து விடுகிறார்கள். இதை வற்புறுத்தி இதற்கு உதாரணமும் ஒன்று சொன்னார். அவர் பேசியதற்கு ஒரு வாரம் முன்னால் தான் அவருடைய இந்தியநண்பர் ஒருவர் (உஷ்ணத்தின் கொடுமை பொறுக்காமலோ என்னவோ) "இந்தியா தேசம் செத்தவரோடு சேர்த்தி" யென்று சொன்னார். அப்படியென்றால் இத்தேசத்து ஜனங்கள் செத்தவர்களைப்போல் நடைப்பிணமாக நடமாடி வருகிறார்கள். அவர்களுக்கு கதிமோக்ஷம் இரண்டுமில்லை யென்றபடி. அதைக் கேட்டதும் ஸர்ஜான் வூட்ராப் அவர்கள் "செத்தார் சாக்காடு காண்பார்"—ஆனால் "இந்திய மாணவர்கள் எப்படி?" யென்று கேட்டார். "அவர்கள் தான் மனவெழுச்சியை யுண்டுபண்ணுகிறார்கள்." (இந்தியா முன்னுக்கு வரலாம் என்கிற மனவெழுச்சி.) அவர்கள் இந்தியா முன்னுக்கு வருமென்கிற உறுதி நம்பிக்கைக்கு இருப்பிடமா யிருக்கிறார்கள் என்று ஸர் ஜான் வூட்ராப் அவர்கள் சொன்னார். "நெல்லுக்குமியுண்டு."

மாணவர்கள் நடத்தையைப்பற்றிப் பலர் குற்றங்கண்டு பேசியிருப்பதைக் குறிப்பிட்டு அந்தக் குற்றங்கள் அவர்களுக்குண்டாயிருக்கும் மனோசக்தி, தன்மதிப்பு இவை காரணமாக எழுந்தவையாக விருத்தலால், அவை காலக்கிரமத்தில் நீங்கிவிடும் என்று சொன்னார். இவ்வுலகில் குணமும் குற்றமும் மிச்ரமித்து (கலந்து) சிக்குமுக்கலாய்ப் பின்னிக் கிடக்கிறது. ஆதலால் "குணம் நாடிக் குற்றமும் நாடி, மிகைநாடி, மிக்கக் கொளல்" தானே தர்மம் என்று சொன்னார். "நெல்லுக்குமியுண்டு, நீர்க்குநுரையுண்டு, புல்லிதழ் பூவுக்குமுண்டு"—ஆகையால் குற்றமில்லாத நற்றம் உலகில் இல்லை. ஆகையால் குற்ற நற்றங்களை யாராய்ந்து எது மேலாய் மிகைப்

பட்டிருக்கிறதோ அதையே நாம் கொள்ள வேண்டும் என்றார். தன்மானம் அல்லது தன்மதிப்பின்றி கூழைக் கும்பிடு போட்டுக் கொண்டு மந்தமதிகளா யிருப்பதைவிட, தன் மதிப்பும் கூர்மைபுத்தியு மமைந்துள்ளவர்களாய் அவற்றோடு சம்பந்தப்பட்ட குற்றங் களுமிருப்பது நல்லது என்று சொன்னார்.

"சக்தியுற்பன்ன ஸ்தானங்கள்."

இந்த மாணவர் சங்கம் பாலர்கள் தம்மாலேயே தன்முயற்சிகொண்டு ஏற்படுத்தப் பட்டதென்று கேட்க அவர் சந்தோஷப் பட்டார். ஏனெனில் அதனால் அவர்கள் சுறுசுறுப்பு புத்தியும் ஸ்வதந்திரப் பிரியமும் உள்ளவர்களென்று காட்டியது. சில மாணவ சங்கங்கள், ஸ்வகாரியப் புலிகளாயுள்ளவர்கள் தங்கள் காரியசித்தியார்த்தம் தூண்டில் போட்டு மீன்பிடிக்கக் குளம் ஏற்பட்டது போல், தங்களுடைய காரியசித்திக்குச் சாதனமான பாலபுத்தியைத் தம் வசப்படுத்திக் கொள்வதற்காக ஏற்பட்டவையாக விருப்பதுண்டு. இந்த சாமாஜம் அப்படியில்லை. அந்தமட்டும் விசேஷந்தானானாலும் அவர்கள் அத்தோடு திருப்தியடையக்கூடாது. அவர்கள் உத்தேச லக்ஷியம் விளங்கச் சாதகசாதனங்களை உளவறிந்து உபயோகிக்கவேண்டும். அதற்கு லக்ஷியத்துக்கேற்ற லக்ஷண மின்னதென்று நன்றாகத் தெரிந்திருக்கவேண்டும். "இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்புவர் புலவனர் என்பர்" ஆயினும் லக்ஷணமின்றி லக்ஷியானுபவம் வித்திப்பது துர்லபம். ஆதலால் இன்னதை யுத்தேசித்து இன்ன செய்கிறோமென்கிற குணம் குறி (லக்ஷியலக்ஷணம்) தெளிவாக அவர் மனதிற் பதிந்திருக்கவேண்டுமென்று சொன்னார். இதுவும் இந்த மாணவர் சங்கத்தைப்போன்ற இதா சங்கங்களும் இந்தியாவுக்குப் பிரத்தியேக லக்ஷணமாயமைந்துள்ள குணங்களும் எண்ணங்களும் உத்ஜீவித்துப் பிரபல விருத்தியாவதற்கு மூலஸ்தானங்களாக விருக்கவேண்டும் என்றும் இந்தியாவின் சக்தியுற்பன்ன ஸ்தானங்களாக விருக்க வேண்டுமென்றும் வற்புறுத்திக் கூறினர்.

இந்தியர் கொள்கைப்படி இந்தப் பிரபஞ்சமெல்லாம் பராசக்தியிலிருந்துண்டாகி விளங்குகிறது என்றும் ஒவ்வொருவரும் அந்தச் சக்தியின் அம்சமாய் விளங்குகிறாரென்றும் உள்ள உண்மையை அவர்கள் மனதிற் பதியக் கூறி, ஈசுவர சங்கல்பத்துக்கு ஒத்துவர அவர்கள் உழைக்கவேண்டுமென்று சொன்னார். அதாவது இந்திய லக்ஷிய லக்ஷணங்களுக்குரிய மாதிரி பிசகாமல் அவர்கள் வியஷ்டிபாவங்கள் சமஷ்டிபாவத்துக்கு ஒத்து விளங்க உழைக்க வேண்டுமென்று சொன்னார்.

பித்ரு பக்திவேண்டும்.

இப்படி யிருக்கவேண்டுமானல் அவர்கள் அந்நியதேசத்தாரைப் பார்த்து அவர்கள் மாதிரி நடந்துகொள்ளவேண்டி அவர்களைப் பார்த்து நடிப்பது கூடாது. இந்தியர்கள் இந்தியாவுக்குரிய லக்ஷிய லக்ஷணங்களைக் கைவிடாது அவர்களுடைய பூர்வீக கிரந்தங்கள், தத்துவசாஸ்திரங்கள், மதசித்தாந்தங்கள் இவைகளைக்கற்று அவற்றுக்கு அனுகுணமாக விருந்து தற்காலத்துக்கேற்றபடி விருத்திக்கு வரவேண்டியது. ஏனெனில் பிரவிருத்தி மார்க்கத்துக்கு அனுக்ரக கர்த்தாக்களாயிருப்பவர்கள் பிதுர் தேவதைகள். பித்ருபக்தி யில்லாவிட்டால் பித்ருக்களின் அனுக்ரகம் கிடைக்காது. அவர்களுடைய அனுக்ரகமின்றி பிரவிருத்தி மார்க்கத்தின் யோகக்ஷேம சம்பத்துக்கள் கைப்பிடியாக சித்திக்கமாட்டா. ஒவ்வொருவரும் தன் வியஷ்டி சுபாவத்துக்கும் சமஷ்டி சுபாவத்துக்கும் உண்மையாக விருக்கப் பார்த்து நடந்துகொள்ளல் வேண்டும். சமஷ்டி விக்ரகத்துக்கு ஒத்து வந்தால்தான் வியஷ்டிபாவனங்கள் பூர்ணபலனைக் கொடுக்கும் (Each must be true to himself & his type)

இரவல்புத்தி பிரயோசனப்படாது.

நீங்கள் உங்களுடைய வியஷ்டிபாவங்களையும் அதனால் விளையும் குணங்களையும் சமஷ்டிபாவனாலக்ஷியமாகிய விக்ரக (type) த்துக்கு ஒத்ததாகச் செய்துகொண்டு அதற்காகப் பிறர் உங்களை மதிக்கவேண்டுமென்று நினைப்பதுபோல நீங்களும் இதரர்கள் தங்களுடைய சொந்த சுபாவத்துக்கும் சமஷ்டிவிக்ரகத்துக்கும் அனுகூலமான குணங்களைத் தங்களில் மட்டுமன்றிப் பிறர்களிடத்தும் விர்த்தி செய்ய வேண்டுமென்று முயற்சித்தும் தூண்டியும் வருகிறவர்களிடத்து மதிப்பு வைத்து நடக்க வேண்டும். பிறருடைய சமஷ்டி வாசனையை மதிப்பதற்கும் பிறரைப்பார்த்துக் "கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி தானுமதுவாகப் பாவித்துத் தன் பொல்லாச்சிறகை விரித்தாடினாற்போல்" இரவல் புத்திகொண்டு நடிப்பதற்கும் மிக்க வித்யாஸம் உண்டு. ஒன்று நன்மையும் நற்குணமும் விருத்திபெறச் செய்யும். மற்றொன்று புன்மையும் புன்னடத்தையும் விர்த்திபெறச் செய்யும். சமீபத்தில் இந்தியாவில் ஒரு பொதுப்பாடசாலை யேற்படுத்துவதற்காக விளம்பரமொன்று பிரசுரித்தார்கள். அதில் போதிக்கிறதற்கான பாடங்களை வாசித்துப் பார்க்க அதில் இந்தியாவிலுள்ள பிள்ளைகள் படிப்பதற்கானதென்று காட்டத்தக்கது ஒன்று கூடவில்லை. அந்நிய தேசப்படிப்பையும் படித்துத் தேறுவது விசேஷந்தான். ஆனால் ஸ்வதேசத்துக் குரிய வித்யாஞானமின்றி அந்நியதேசப் படிப்பு மட்டும் படிப்பது ஒரு பிரயோசனத்தையும் கொடுக்காது. இதர தேசத்தார் போதிக்கத் தக்கது என்ன வுண்டோ அதையெல்லாம் அவர்கள் கிரகித்துத் தெரிந்துகொள்ளட்டும். ஆனால் அதை இந்திய லக்ஷியங்களுக்கு அமைந்ததாகப் பக்குவப்படுத்தி உள்ளமுணர உணர்ந்து உணர்வுகொள்ள வேண்டும். இப்படிச் செய்வதனால் இந்தியாவுக்கு விசேஷமான "ஹோமாக்னி" வளர்த்து அதில் இதர தேசங்களிலிருந்து கிடைத்த ஞானத்தையும் ஹவிஸாகக்கொண்டு ஹோமம் செய்யலாம். அந்த ஹோமத்தீயில் ஆகுதி செய்யப்பட்டனவெல்லாம் இந்தியாவின் சாசுவதமான லக்ஷியங்களை வளர்ப்பதற்கான உணவாகும்.

CULTIVATE WILL-POWER.

இச்சாசக்திப் பயிர்ச்சிவேண்டும்.

இப்படியாக ஒவ்வொருவரும் சக்தியம்சமாயிருக்கிறதை யுணர்ந்து "சிதக்னிகுண்ட ஸம்பூதையான" தேவியின் சக்தி விளங்குவதற்கான ஆதாரமாகவும் அவர்களைச் சுற்றி அச்சக்தியின் மஹிமை விளங்கத்தக்கதாகவும் செய்துகொள்ள வேண்டும். இந்தியாவுக்கு இப்பொழுது அத்யாவச்யமாக வேண்டியது சக்தியை வளர்க்கும் மதம். சக்தி யென்றால் வெறும் ஸ்தூலபாவனையான முரட்டு பலம் என்று அர்த்தமல்ல. சக்தியென்று அவர் சொன்னது "Cultivation of Will-Power" என்று சொல்லும் இச்சாசக்தி ரூபமானஸூக்ஷ்ம சக்தியின் பயிர்ச்சி. இஃதொன்றுண்டானால் ஞானசக்தியும் கிரியாசக்தியும் தானே வரும். இதையே சித்சக்தி யென்று சொல்லுவர் நம்மனோர். ஏனெனில் இச்சாசக்தியினாலேயே ஆத்மசக்தியாகிய சித்சக்தி அடையப்படுகிறது. இப்படியாக அவர்களுக்குச் சொல்லி வரும் புத்திமதிகளும் உபதேச மொழிகளும் நாளுக்கு நாள் இந்தியர்களின் ஸ்வபாவமான விவேக விர்த்தியினால் பிறர் சொல்லத் தேவையில்லாமல் குறைந்து வருகிறது அவருக்கு சந்தோஷத்தைக் கொடுக்கிறது.

"IN THE WORLD-PLAY LET YOURS BE A PURELY INDIAN PART."

அவர் சுமார் 15-வருஷங்களாக இத்தேசத்தில் வசித்து வருகிறார். புனிதபூமியாகிய இத்தேசத்தின் வருங்கால நிலைமையை உணர்த்தும் அறிகுறிகளை யறிந்து வாசிக்க அவர் யத்தனப்பட்ட வண்ணமாயிருக்கிறார். அப்படிப்பட்ட அவருக்கு இந்திய மாணாக்கர்கள் குணத்திலும் மணத்திலும் இந்தியாவின் வருங்

கால நிலைமையை வாசிப்பது சுலபமாயிருக்கிறதுபற்றி மிக்க சந்தோஷப்படுவதாகச் சொன்னார். இவ்வுலகில் நடந்துவரும் பிரபஞ்ச நாடகத்தில் அவர்கள் எடுத்துக்கொள்ளும் பாகம் இந்தியா சம்பந்தமானதாகவேயிருக்கட்டும். இந்திய லக்ஷியங்களால் உலகுக்கு ஆகவேண்டியது நிரம்ப இருக்கிறது. முடிவாக மாணவர் கற்றுக் கடைத்தேறுவதற்கின்றியமையாததாயுள்ள குரு-சிஷ்யர்களின் பிரார்த்தனையாகவுள்ள மந்திரத்தைச் சொல்லி பாலபுத்தியும் அதைப் பண்படுத்திப் பயிர்ச்சி செய்வோரும் அம்மந்திரத்தினால் அதன் அர்த்தத்தை யுணர்ந்து பயன்படுவோராகட்டும் என்று சொன்னார்.

வித்தியா லக்ஷணம்.

"பகவான் நம்மை (குரு-சிஷ்யர்களை) இரக்ஷிப்பாராக. அவருடைய அனுக்ரகம் நம்மிருவருக்கும் சித்திப்பதாக. நாமிருவரும் (குரு-சிஷ்யர் இருவரும்) நம் பூர்ணசக்தியையும் உபயோகித்து உழைப்போமாக. நாம் படிப்பதும் கற்பதும் உள்ளுணர்வோடு கூடினதாக விருக்கட்டும். நம்மிருவருக்கும் விவாதமுண்டாகாமலிருக்கட்டும்."

'May God protect us both. May He grant to us both aid. May we two Work with all our strength. May our study be with understanding. May there be no dissension between us."

---



## MRS. ANNIE BESANT ON FEMALE EDUCATION.

## இந்தியதேசப் பெண்களின் வித்தியாப்பியாசத்தைப்பற்றி அன்னிபெஸண்டு அம்மாள் எழுதியது.

"குஞ்சி அழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யாம் என்னும் நடுவுநிலைமையாற்
கல்வி அழகே அழகு."

---

1893ஸ்த்தில் நானும் வாச்சிமின்ஸ்டர் அம்மாளும் இந்த தேசத்துக்கு வந்தவுடன் நாங்கள் செய்வதாக உத்தேசித்த காரியங்களுக்குள் முதன்மையான விஷயம் இந்நாட்டிலுள்ள சிறிய பெண்களுக்குக் கல்விப்பயிற்சி செய்வதேயாம். ஆனால் ஜனங்கள் எங்களுடைய நோக்கங்களைச் செவ்வையாயறிந்து அதின் மூலமாய் எங்களிடத்தில் சந்தேகமன்றியில் அவர்களுக்கு எங்கள் முயற்சியில் நம்பிக்கை உண்டாகும் வரையில் நாங்கள் அந்த விஷயத்தில் யாதொரு பிரயத்தினமும் செய்யாமல் தாமசிக்கவேண்டுமென்று இங்குள்ள அநேக புத்திமான்கள் தெரிவித்தார்கள். இத்தேசத்து மங்கை ஒருத்தி கேடுகெட்டு துர்ப்பாக்கிய ஸ்திதியை அடைந்த காரணத்தினால் பெண்களின் வித்தியாப்பியாசத்தில் ஜனங்களுக்கு விசுவாசக்குறைவு நேரிட்டதுமல்லாமல் வித்தியாப்பியாசத்தை ஒரு வியாஜமாகவைத்துக்கொண்டு பெண்களை கிறிஸ்து மதத்தில் சேர்க்க முயற்சிக்கப் படுகிறதென்ற பயம் அவர்களுக் குண்டாயிருந்தது. ஆகையால் அவர்கள் மேற்கண்டபடி தாமசிக்கச் சொன்னது யுக்தமாகத்தோன்றினமையால் அதை நாங்கள் அங்கிகரித்தோம். அதுமுதல் இப்போது பத்து வருஷங்களாயின. எங்களுடைய நிஷ்கல்மஷமான கருத்தைப் பற்றியும் எங்களுடைய முயற்சியின் நேர்மையைப்பற்றியும ஹிந்து ஜனங்களுக்கு நம்பிக்கை யுண்டாயிருக்கிற

தென்று இப்போது உண்மையாய்ச் சொல்ல லாம். பெண்களின் கல்விப் பயிற்சியைப்பற்றி வேண்டிய முயற்சி அவசியம் செய்யவேணு மென்று என்னைக் கேட்டுக் கொண்டவர்கள் அநேகர். அப்படிப் பின்முறை இவ்விதமாய் இருக்கவேணுமென்று எழுத்து மூலமாயும் உபந்நியாச மூலமாயும் நான் வெளியிட்டிருப் பதை சிராசேக்ஷபணையாய் அங்கீகரித்திருக்கிறார் கள். ஆகையினால் அம்முறையையே விஸ்தார மாய் பிரசித்தப்படுத்த இது நல்ல சமயமென்று தோன்றுகிறது. அதற்கு வெகு ஹிந்துஜன சம்மதமிருக்குமாகில் இந்தியதேச முழுமையும் பெண்களின் வித்தியாப்பியாச சம்பந்தமாய் அம்முறையையே ஆதாரமாக ஏற்படுத்திக் கொள்ளலாமென்றும் தோன்றுகிறது. சில தியாசாபிகல் சங்கத்தாரால் நடத்தப்பட்டு வரும் சில சிறிய பெண் பாடசாலைகளில் அம் முறை அனுஷ்டானத்தில் இருக்கின்றது. அம் முறை இனி மென்மேலும் அபிவிருத்தியடை ந்து நடைபெறலாம்.

பெண் கல்வி சம்பந்தமாய் இத்தேசத் தில் அனுஷ்டிக்க வேண்டிய முறையானது, இத்தேசத்தின் சுபாவத்துக்கும் தன்மைக் கும் ஒத்ததாயிருக்கவேண்டும். அம்முறையா னது ஹிந்துக்களுடைய அபிப்பிராயத்தில் ஸ்திரீகளுக்கு எந்த நிலைமை அமைத்தல் வேண்டுமோ, அந்நிலைமைக்கு அனுகுணமா யிருக்கவேண்டும். அந்நிலைமையானது நவீனர் களுடைய க்ஷீணித்த அபிப்பிராயத்தை அனு சரிக்காமல் பிராசீனமான மேன்மையான நோக்கை நாடியே இருத்தல் வேண்டும். ஸ்திரீயானவள் மாதாவாகவும், பத்தினியாக வும், ஒரு சமயம் வித்தையும் பக்தியும் வைராக் யமும் பொருந்திய பூர்வகாலத்து பிரம்ம வாதினியாகவும் ஆகுகிறதற்கு அனுகூலமாய் அந்த முறையானது அமையவேண்டும். அம் முறையை அனுஷ்டிப்பதினால் வெளிப்பட லௌகிக வியாபாரங்களிலும் பொது விஷயங் களிலும் ஸ்திரீகள் பற்பல முயற்சிகளில் நாளு க்கு நாள் புகுந்து புருஷனுக்கு எதிரியாய் போட்டி பாராட்டிக்கொண்டு வருகிற மேல் நாட்டு ஸ்திரீகள் போன்று ஹிந்து ஸ்திரீகள் ஆகக்கூடாது. மேற்கு தேசத்தார் ஸ்திரீ புருஷர்களுடைய பரஸ்பர ஆசரணையைப்பற்றி அவர்கள் தாங்களாய் ஏற்படுத்திக்கொண் டிருக்கும் முறையை அவர்கள் அனுசரிக்க வேண்டியதுதான். அம்முறையை கிழக்கு தேசத்தார் ஆசரிப்பது யுக்தமன்று. ஸ்திரீ களுடைய கல்வி விஷயமாய் மேற்கு தேசத் தார் அனுசரித்து வரும் முறைகள் இந்த தேசத்துப் பெண்களுக்கு பொருத்தமல்ல. ஆனால் சில பிரகிருதங்களில் பெற்றோர்கள் தங்களுடைய புத்திரர்களுக்கு ஒப்பந்தம் தங்களுடைய புத்திரிகளும் வித்தியாப்பியாசம் அடையவேண்டு மென்று இஷ்டப்பட்டால் அவ்வண்ணமே செய்விக்கலாம். ஆனால் இத் தேசத்தில் எல்லாருடைய பொது அனுஷ் டானத்திலிருக்க வேண்டிய முறையானது இந்த தேசத்தார்களுடைய அவசியத்துக்கு ஒத்ததாகவே இருக்கவேண்டியது. இத்தே சத்திற்கு வேண்டிய தென்னவென்றால் கௌர வமான ஆசரணைகளில் பயிற்சியடைந்த பத் தினிகளும் மாதாக்களும் கிருக கிருத்திய விஷயங்களைச் சாதுரியமாகவும் அன்பாகவும் நடத்தக்கூடிய ஸ்திரீகளும், பாலர்களுக்கு வித்தியாப்பியாசம் செய்விக்கக் கூடிய ஸ்திரீ களும், தங்கள் பர்த்தாக்களுக்கு அனுகூல மான யோசனை சொல்லக்கூடியவர்களும், வியாதியுள்ளவர்களுக்கு ஆதரவுடன் நன்றாகப் பயின்ற சிகித்ஸை செய்யக்கூடியவர்களுமே யாம். உயர்ந்த பரிக்ஷைகளில் தேறின ஸ்திரீ கள் இத்தேசத்துக்கு அவசியமன்று.

ஆகையால் இத்தேசப் பெண்களுக்கு சுகி ருதமான முக்கிய வித்தியா முறைகளைத் இத னடியில் விவரிப்போம்.

I. ஹிந்து சமயம், நல்லொழுக்கம், இவை கள் சம்பந்தமான கல்விப் பயிற்சி:—ஒவ் வொரு பெண் குழந்தைக்கும் அவரவ

ருடைய சமயநெறி முறைகளைத் தெளிவாயும் இலகுவாயும் விவேகத்துடனும் கற்பிக்க வேண்டும். ஸநாதந தர்ம்ம புஸ்தகங்கள் 1—2 பாகங்கள் பெண்களுக்கும் மிகவும் உபயோகமானவைகளாயிருக்கும். இவைகளை செவ்வையாக கற்றறிந்தபின், பெண் பாட சாலைகளை விட்டபிறகு அவைகளுக்கு மேற் பட்ட கிரந்தமாகிய 3-ம் பாட புஸ்தகத்தைப் படிக்கத்திறமை யுள்ளவர்களாவார்கள். மகா பாரதம் இராமாயணம் மனுஸ்மிருதி இவை களிலிருந்து நல்ல ஒழுக்கத்தைப் பற்றிய விஷயங்களை எடுத்து அவர்களுக்குப்போதிக்க வேண்டும். ஹிந்தி பாஷை தெரிந்த எல்லாப் பெண் குழந்தைகளும் துளசிதாஸ் இராமா யணத்தைப் படிக்கும்படி செய்யவேண்டும். இத்துடனே சுதேசபாஷைகளிலுள்ள ஸ்தோத் திரங்களையும், சம்ஸ்கிருத ஸ்தோத்திரங்களை யும், படிக்கும்படி செய்தும், பகவத்கீதை, அம்ஸகீதை, அனுகீதை இவைகளிலும் இன் னும் மற்ற உயர்ந்த கிரந்தங்களிலுமுள்ள அநேக ரம்மியமான சுலோகங்களை, அவர்கள் முகஸ்தமாக ஒப்பிவிக்கும்படி செய்யவேண் டும். அவர்களுக்குப் பூஜை செய்யக் கற்றுக் கொடுத்துப், பூஜையின் தாத்பரியங்களை சுலப மாய் அவர்களுக்கு உபதேசிக்கவேண்டும். இத்தேசத்திலுள்ள ஒவ்வொரு ஸ்திரீக்கும் இயற்கையாயுள்ள பக்திமார்க்கத்தை அபி விர்த்தி செய்ய வேண்டியதுமன்றியில், அதன் பிரயோஜனத்தையும் தாத்பரியத்தையும் நன் ருக அறியும்படி செய்யவேண்டும். அவர் களுக்கு பாரம்பரியமாய் கிடைத்திருக்கும் பரிசுத்தமானதும் விவேகத்தோடு கூடியது மான சிரத்தையை மேன்மேலும் விருத்தியா கும்படி செய்யவேண்டும். இன்னும் மேலான வித்தைபெற யோக்கியதை ஒரு ஸ்திரீக்கு இருக்குமாகில், அவளுக்கு அம்மேலான வித்தை போதிக்காமலிருக்கக்கூடாது. அவ் விதமாகப் போதித்தால், மயித்திரேயி, கார்க்கி இன்னும் பூர்வத்தில் வேதகானம் செய்த ஸ்திரீ ரத்தனங்கள் போன்ற ஸ்திரீகள் இக் காலத்திலும் உண்டாவதற்கு ஹேதுவாயிருக் கும். மகம்மதியர் சமயம் ஜோராஸ்டிரியர் மதம் இவைகளைச் சேர்ந்த பெண் குழந்தைகளுக்கு மேலாகச் சொல்லிய ஹிந்துமத கிரந்தங் களுக்கு பதிலாக, அவரவர்களுடைய மதசம் பந்தமான புஸ்தகங்களைப் படிக்கும்படி செய்ய வேண்டும். பேர்சியன் பாஷையில் மகம்மதிய பெண் குழந்தைகளுக்கு படிப்பையும் புத்தி விசாலத்தையும் கொடுக்கக்கூடிய அநேக மனரம்மியமான பக்தி வசனங்கள் இருக்கின் றன. அவைகளுடன் அரேபியா பாஷை யிலுள்ள அநேக கிரந்தங்களும் மிகவும் உப யோகமுள்ளவைகளாயிருக்கும்; பார்சிகர்களுக் குள்ளும் அவர்களுடைய பெண்குழந்தை களின் கல்விக்கு யோக்கியமானதும் சுலப நடையிலுள்ளதுமான அநேக மத கிரந்தங் களிருப்பது மல்லாமல், அவஸ்தாபால்வி என்ற பெர்ஷிய பாஷைகளிலுள்ள நூல்களையும் படிக் கலாம். இம்மதங்கள் சம்பந்தமாய் தென்னிந் தியாவில் சுதேச பாஷைகளில் மிகுதியான கிரந்தங்களிருப்பது எனக்குத் தெரியாது. ஆனல், உத்தரதேசங்களில் மகம்மதிய பெண் குழந்தைகளின் வித்தியாப் பியாசத்துக்கு அனுகூலமான அநேக கிரந்தங்கள் உருடு பாஷையிலிருக்கின்றன.

II. காவிய அப்பியாசத்தைப்பற்றி:— சுதேச பாஷையை நன்ருக வாசிக்கவும் எழுத வும் பயிற்சி உண்டாகவேண்டும். இந்தி, உருடு, பெங்காளி, மஹாராஷ்டிரம், குஜராத்தி, தெலுங்கு, தமிழ், கன்னடம், மலையாளம் இந்த பாஷைகளில் அநேக மூல கிரந்தங்களும் மொழிபெயர்ப்பு கிரந்தங்களும் இருப்பதில், அவைகள் மிகுதியான காவியஞானத்தைக் கொடுக்கக் கூடியனவாகவும், பெண்குழந்தை களுக்கு வயசானபிறகு சாவகாசமுள்ளகாலத் தில், படிப்பால் மனசுக்கு ஆனந்தத்தைக் கொடுக்கக்கூடியவைகளாகவு மிருக்கின்றன. ஸ்வபாஷை தவிர, படிக்க அவகாசமிருந்தால்

வேறொரு சுதேச பாஷையை சம்பாஷிக்கக் கற்றுக்கொள்வது பெண்குழந்தைகளுக்கு மிகவும் உபயோகமுள்ளதாயிருக்கும். அவரவர்களுடைய மதத்துக்கு அனுகுணமாய் பூர்விக பாஷையாகிய சம்ஸ்கிருதம், அரபி, பேர்ஷியன் இவைகளில் ஏதாவது ஒன்றிலே நன்றாக பயிற்சியடைந்தால் அதிலிருக்கும் உத்தம கிரந்தங்களைப் படித்து ஆனந்தமடைய ஹேதுவாயிருக்கும். கிராகிய சக்தியை அதிகமாகவுடைய இந்த தேசத்துப் பெண்கள் அந்த பாஷைகளை நன்றாய்க் கற்றறிந்து தேர்ச்சியடைந்த பிறகு அவைகளால் மிகுதியான சந்தோஷத்தையடையவும், அவர்களுடைய பர்த்தாக்கள் மேலான காவ்வியங்களைப் படனம் செய்யும்பொழுது, கேட்டு அறிவுடன் ஆனந்திக்கவும் கூடும். இந்துதேச சரித்திரம், இந்துதேச பூகோளசாஸ்திரம் இவைகளையும் படிக்கும்படி செய்து ஷை சரித்திரத்தில் பிரஸ்தாபிக்கப் படுகின்ற சாத்விகிகளான உத்தம ஸ்திரீகளின் கதைகளடங்கிய பாடபுஸ்தகங்கள் தயார் செய்து கொடுத்தால் அவைகளைப்படித்து அந்த உத்தம ஸ்திரீகளினுடைய ஆசரணைகளை அனுசரித்து நடப்பது மட்டுமல்ல, அக்கதைகள் இந்த தேசத்தில் முற்காலத்தில் குலஸ்திரீகள் எவ்வளவு மேன்மையான பதவியை அடைந்திருக்கின்றார்கள் என்பதற்கு சாக்ஷியமாக உபயோகப்படும். தற்காலத்தில் இத்தேச ஸ்திரீகள் தாழ்மையான நிலைமையையும் மிகவும் அற்பமான விஷயங்களில் மனசுபற்றி இருப்பதையும் உத்தேசிக்கையில், மேலேகண்ட கதைகளை அவர்கள் படித்துப்பார்த்து அதினால் மேன்மையடையவேண்டியதும், அவர்களுடைய மனசானது விகாசத்தையடைந்து மேலான தாத்பரியங்களை அடையவேண்டியதும், இந்த தேசத்தவர்களின் பூர்விக அபிப்பிராயத்துக்கும் ஆசரணைக்கும் ஒத்து நடக்கும்படி அவர்களைச் செய்யவேண்டியதும், மிக்க அவசியமாயிருக்கின்றன. இந்ததேசத்துப் புருஷர்களே மேற்கு தேசத்தவர்களின் கீழான ஆசரணைகளைக் கைக்கொள்வது அயுக்தமாயிருக்கும்போது, ஸ்திரீகள் அந்த ஆசரணைகளை அனுசரிப்பது மிகவும் அயுக்தமென்பதில் சந்தேகமில்லை. மேலும் இந்த தேசத்திற்கு இயற்கையாயுள்ள நிஷ்கல்மஷத்துடன் சிறப்புப்பெற்று இனிமையாய் விளங்கிவரும் ஸ்திரீயின் உயர்வு இவ்வுலகத்துக்கே மேன்மை பயக்கக் கூடியதாகையால் அதைக் கெடுத்துவிடுவது கொஞ்சமேனும் யுக்தமன்று. இந்த தேசத்து மனிதர்கள் ஆங்கிலேயர்களுடைய அபிப்பிராயங்களை நாளுக்கு நாள் அனுசரிப்பதினாலும், இந்தியர்களிடம் பக்ஷம் பாராட்டும் அநேக ஆங்கிலேய ஸ்திரீகள் அவர்களுடைய சகோதரிகள் போன்ற இத்தேசத்து ஸ்திரீகளுடன் சல்லாபம் செய்ய பிரியப்படுவதினாலும், இத்தேசத்துப் பெண்களும் ஆங்கிலேய பாஷையையுங் கற்று அதின் மூலமாய் இத்தேசத்திற்குப் புறம்பாயுள்ள மற்ற தேசத்தார்களுடைய அபிப்பிராயங்களையும் கொள்கைகளையும் ஒருவாறு தெரிந்துகொள்வதும், அவசியமாகவும் இருக்கும். அப்படித் தெரிந்துகொண்டால் காலக்கிரமத்தில் அவர்களுடைய பர்த்தாக்களுடன் அந்த அபிப்பிராயங்களைப் பற்றி சுகமாக சம்பாஷித்துத் தெரிந்து கொள்ளவும், தங்கள் நிலைமைக்கு எவ்விதக் குறைவுமின்றி புத்திவிசாலத்தையடையவும், எளிதாயிருக்கும்.

III. சாஸ்திரப் பயிற்சி:—இத்தேசத்தில் பத்தினியாகவும் மாதாவாகவும் ஒரு சிறிய கிராமத்துக்குச் சமானமாகிய குடும்பத்தை யாளவேண்டியவளாகியும் ஏற்படக்கூடிய ஸ்திரீக்கு, சுகாதார விதிகளையும் ஆகார பதார்த்த குணங்களையும் தெரிந்து கொள்வதும், வியாதியுண்டானால் சுலபமான ஔஷதங்களைப் பிரயோகிக்கவும், ஆபத்துக்காலத்தில் அதற்கேற்ற சிகித்ஸையை செய்து கொள்ளவும், நாகரிகமாய் சமையல் செய்யவும், கிரககிருத்திய விசாரணை செய்து வரவு செலவுக் கணக்கு

வைக்கவும் தெரிந்து கொள்ளவேண்டியது மிகவும் அவசியம். அந்தந்த கிரகத்தில் தேக சௌக்கியத்தை கவனித்து நடக்கவேண்டிய முறையையும், நல்லகாற்று வெளிச்சம் சுத்த மாயிருத்தல் முதலியவைகளின் பிரயோஜனத் தையும், அவர்களுக்குக் கற்பிக்கவேண்டியது. இவைகளெல்லாம் பூர்வீகத்தில் இந்த தேச த்து ஸ்திரீகள் நன்றாய் அறிந்து அனுஷ்டித்து வந்தார்கள். பாடசாலையிலேயே சிறிய பெண் களுக்கு இவ்விஷயங்களை கற்றுக்கொடுக்கும் பக்ஷத்தில், பின்பு கிரகத்தில் அவர்கள் கிரமப் படி அனுஷ்டிப்பதற்கு உதவியாயிருக்கும். ஆனால் தற்காலத்துப் பெண் குழந்தைகள் இந்த விஷயங்களில் அவர்களுடைய முன் னோர்களைக் காட்டிலும் கீழான ஸ்திதியிலிருக் கிறார்கள். ஆகாரத்துக்கு சம்பந்தப்பட்ட பதார்த்தங்களின் குணங்களையறிந்து அவை கள் இவ்விதமாக தேகத்தின் அஸ்தி, நரம்பு, தசை முதலானவைகளுக்கு அநுகூலம் அல் லது பிரதிகூலமாயிருக்கு மென்றும், அவை களில் இன்ன இன்னது உன்மத்த ஆகா ரம் அல்லது பலாபிவிர்த்திக்கு ஏற்றது என்றும், தெரிந்துகொள்ள வேண்டியது மஹா அவசியம். ஒவ்வொரு சந்தர்ப்பத்தி லும் வைத்தியனை அபேக்ஷிக்காமல், சாதாரண ஔஷதங்களை தங்கள் சிசுக்களுக்கு அவசிய மானபோது வினியோகிக்கவும், சொற்பகாயங் களுக்குப் பரிகாரம் செய்யவும், கொடுங்காயம் நேர்ந்தால் வைத்தியன் வரும்வரையில் உயிர்ச் சேதமன்றியில் பாதுகாக்கவும், அவர்களுக்குத் தெரியவேண்டியதுந் தவிர, வியாதியஸ்தர்களை உபசரிக்கவும் வைத்தியன் சொல்லும் முறை களை சரியாக அநுசரித்து காலக்கிரமமாக ஆகாரம் ஔஷதம் முதலியவைகளைக் கொடுக் கவும், அவர்கள் தெரிந்துகொள்ள வேண்டியது முக்கியம். கிரக கிருத்தியத்துக்கு அவசிய மானபடி பதார்த்தங்களின் அளவு, விலை முதலியவைகளையறிந்து விரைவாகவும் சரியாக வும் கணக்கு எழுதுவதற்குப் போதுமான மட்டில் கணிதமும், அவர்கள் கற்றுக்கொள்ள வேண்டும். இத்தேசத்துப் பத்தினி, பாக சாஸ்திரம் முக்கியமாய்த் தெரிந்து கொள்ள வேண்டியதா யிருப்பதாலும், அதன்றியில் அவள் புருஷனுக்காவது குழைந்தைக்காவது கிரகத்தில் சவுகரியத்தை உண்டாக்கக் கூடாத தாலும் அதைப் பாடசாலையில் கற்பிக்கவேண் டிய தவசியம். இந்த தேசத்திலுள்ள பரி சாரகர்கள் மற்ற தேசத்திலிருப்பது போலவே வீட்டின் எஜமானி மேல்பார்க்கவும் சீர் திருத்தவும் தகுந்தவளாயிருந்தாற்றான் வேலை களை நன்றாகச் செய்யக்கூடியவர்களா யிருப் பார்கள்.

IV. அலங்கார சாஸ்திரப் பயிற்சி:—அவ காசமான காலத்தை வீண்பேச்சிலும் வம்பி லும் செலவழிக்காமல் சுகமாக உபயோகிக் கும்படியாய் ஏதாவது ஒரு அலங்கார சாஸ் திரத்தின் ஒரு முறையை பெண்களுக்கும் பாடசாலையில் கற்பித்துக் கொடுக்கவேண்டும். தென்னிந்தியாவில் சங்கீத சாஸ்திரம் அபி விர்த்தியாய் வருவதில் அதில் ஜனங்களுக்கு முன் இருந்த பிரியக்குறைவு அவ்வளவாக இப்பொழுதில்லை. வீணை அல்லது வேறு வாத்தியத்துடன் ஸ்தோத்திரங்களை கானஞ் செய்வது, பெண் குழந்தைகளுக்கு மிகவும் சந்தோஷத்தை கொடுப்பதா யிருப்பதுமல்லா மல், கிரகத்துக்கு முக்கிய அலங்காரமாயு மிருக்கும். சித்திரித்தல், வர்ணித்தல் முதலிய பிரவர்த்திகள் சிலர்களுக்குப் பிரியமுள்ளவை களாக இருப்பதுந்தவிர, ஜரிகை வேலை, தையல் வேலை, முதலியவைகளும் அவர்கள் சுலபமாய்க் கற்றுக்கொள்ளக் கூடியவைகள். தையல் வேலையும், உடுப்பு அளவுபார்த்து செய்தல் முதலியதும் அவர்கள் அவசியமாய்க் கற்க வேண்டும். இவைகளில் பெண்களு டைய பிரியத்துக்கு ஏற்ற முறைகளைக் கற்பித் துக் கொடுக்கவேண்டும். சங்கீதமட்டும், அநேகமாய் எல்லாரும் பிரியமாய்க் கைக் கொள்ளக் கூடியதாக விருக்கும்.

V. சரீரப்பயிற்சி:—இப்பொழுது குழந்தையாயிருக்கும் பெண்கள் காலக்கிரமத்தில் புத்திரவதிகளாக வேண்டியவர்களா யிருப்பதால், அவர்களுடைய தேகபலத்துக்கு வேண்டிய் பயிற்சியை அனுதரவு செய்யக்கூடாது. அதற்குத் தகுந்த அப்பியாசத்தைப் பாடசாலையில் கற்பித்துக்கொண்டு வரவேண்டும். தென்னிந்தியாவில் பின்னல் கோலாட்டம் என்னும் அப்பியாசத்தை, பெண்குழந்தைகள் அனுசரித்து பாடிக்கொண்டே உலாவி நூல்களைப் பின்னியும், அவ்விதமாகவே பின்னல்களை அவிழ்த்தும், விளையாடுவதில் பிரியமுள்ளவர்களா யிருக்கிறார்கள். இன்னும் அநேக விதமான அப்பியாசங்கள் இருப்பதில் அவைகள் மிரம்ப பிரயோஜன முள்ளவைகளாகவும் சுகமாகவும் சுறுசுறுப்பைக் கொடுக்கக்கூடியவைகளாயு மிருக்கின்றன. இவைகளால் பாலிய வயசுடையவர்கள் தேக சௌக்கியத்தைப் பெற்று விகாரமன்றியில் அழகாக நடக்கப் பழகுகின்றார்கள். பெண்குழந்தைகள் கூட்டமாகக் கூடி அவர்களுடைய இளங்குரலுடன் பாடிக்கொண்டும், கைகளைக் கொட்டியும், அல்லது கோலாட்டம் போட்டுக்கொண்டும், வரிசை வரிசையாக அவர்கள் உலாவிச் செல்லும் காட்சியைக் காட்டிலும், அதிக சந்தோஷத்தைக் கொடுக்கக்கூடியது என்ன இருக்கிறது. சரீர பல விருத்திக்கு வேண்டிய பயிற்சியை இளமையிலேயே கற்பிக்காத பக்ஷத்தில், வயசு சென்ற பிறகு பல விதமான தீரா வியாதிகளும், பிஞ்சில் பழுத்தல் என்ற அகால விருத்தாப்பியமும், நேரக்கூடியதாயிருக்கும்.

மேலாக விவரித்திருப்பது தான் இந்த தேசத்துப் பெண்கள் கற்கவேண்டிய வித்தியா விஷயத்தின் பொதுவான முறைகளாம். இதின் மூலமாய் மேன்மேலும் உபயோகமுள்ளவர்களாகவும் கிரக கிருத்தியங்களைப் பார்க்க வல்லமையுள்ள கிரகணிகளாகவும் ஆவார்கள். மேற்கண்ட விதமாய்த் தேர்ச்சியடைந்த ஸ்திரீகள் வீடுகளில் விளக்குகள் போல் விளங்குவார்கள். பெண்களில் மேலான படிப்பையும் உத்கிருஷ்டமான விஷயத்தையும் கற்றுக்கொள்ள யோக்கியமான மேதாவிகள் சிறு பான்மையோர் எப்பொழுதும் இருக்கக்கூடும். தனித்தனி அவர்களுடைய புத்தி சுபாவத்துக்குத் தக்கபடி ஏற்றவைகளை அவர்களுக்கு கற்பித்து மேம்பாட்டை அடையச் செய்யவேண்டும். ஏனென்றால் பண்டைய காலத்திற்போல இக்காலத்திலும் உத்தம ஸ்திரீ இரத்தினங்கள் உதயமாகி இத்தேசத்திற்கு மங்கியிருந்த உயர்ந்த ஸ்திரீ மேதையென்ற முக்தாமணியை மறுபடியும் திரும்ப பிரகாசிக்கும்படியாக இப்பெண்கள் இந்நாட்டில் ஜனித்திருக்தல் கூடும். அவர்களுடைய மேன்மையான பிரவிர்த்தியைத் தடுப்பதும் அப்பிரவிர்த்தியில் அவர்களுக்கு அனுவசியமாய் இடையூறுகளை உண்டு பண்ணுவதும் கொஞ்சமேனும் சரியல்ல.

ஒரு விஷயம் முக்கியமாய் கவனிக்கத்தக்கது. அதாவது:—இத்தேசத்து ஸ்திரீகளின் பெருமை பூரணமான விருத்திக்கு வந்தாலொழிய இத்தேசம் மேன்மையான பதவியை அடைய முடியாது. இந்தியாவின் சீர்திருத்தமும் இத்தேசத்து ஸ்திரீகளின் சீர்திருத்தத்தை பொருத்தே யிருக்கின்றது. புருஷனை மேன்மை பெறச்செய்பவளும் அல்லது அவனைத் தாழ்மைப்படுத்துபவளும் அவன் பத்தினியேயாவாள். குழந்தையை ஆளாக்குவதும் பாழாக்குவதும் தாயேயாம். புருஷனின் மேன்மையும் தாழ்மையும் ஸ்திரீயின் கைக்குள்ளடக்கம். அவ்விருவர்களும் ஒற்றுமையாயிருந்து இந்தியாவைச் சிறப்பிக்க முயன்றாலொழிய இந்தியாதேசம் எப்பொழுதும் மேன்மையை அடையாது. பாலர்களுக்கு சமயம், நல்லொழுக்கம் இவைகளைக் கற்பிப்பதற்கு நாங்கள் எடுத்த முயற்சியானது ஒருவாறு பயன்பட்டு வருகிறது. அப்பயன் இந்துதேச முழுமையும் பூர்ணமாகப் பரவ வேண்டியது முக்கியம். பெண் குழந்தைகளின் வித்தியாப்பியாசத்தைப்பற்றிய முயற்சி இப்பொழுது தான் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றது. அம்முயற்சியைக் கைக்கொண்டு பிரவர்த்திப்பவர்களுக்கு ஈசுவரகடாக்ஷமுண்டாகி சமஸ்த தேவதைகளும் அவர்களுக்கு புத்தியையும், பலத்தையும், மனோதைரியத்தையும் கொடுத்து அநுக்கிரகம் செய்வார்களாக. சுபமஸ்து.

"தொட்டனைத்து ஊறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத்து ஊறும் அறிவு."

## THE HEAVENLY KINDERGARTEN, OR TRUTH SYMBOLISED IN TEMPLES AND SHRINES.

"The most abstract truth may often be more concretely presented than at first would appear possible, and when so presented reaches ears and hearts which otherwise would fail to receive it."—*Golden Thoughts gleaned from Western Authors.*

### சிதம்பரம்.

[நாங்கள் சுற்றுப் பிரயாணம்செய்து வருகையில் தரிசித்த ஸ்தலங்களில் முதன்மையானதும் முக்கிய மானதும்சிதம்பரக்ஷேத்ரம். அதைப்பற்றி இங்கேசற்று விவரித்தெழுதி விளங்கவைப்போம்.]

பிருதிவி, அப்பு, தேயு, வாயு ஆகாசமென்னப்படும் பஞ்சபூதங்களின் உருவமாகக்கடவுள் தம்மை ஆத்ம கோடிகளுக்குக் காட்டிக் கொடுத்த ஸ்தலங்களில் சிதம்பரமும் ஒன்று. முதலாவது திருவாரூர்; இரண்டாவது ஸ்ரீரங்கத்துக்கு அருகிலுள்ள ஜம்புகேசுவரம் என்கிற திருவானைக்காவல்; மூன்றாவது காளஹஸ்தி; நான்காவது தேயு ரூபமான திருவண்ணாமலை; இத்திருப்பதியில் கார்த்திகைமாச பௌர்ணமி சமயத்தில் மலை முழுவதும் விளக்குகள் ஏற்றப்படுவதினால் அக்கினிகோளம் போற் காணப்படும். ஐந்தாவதும் கடைசியானதுமான ஆகாச ரூபமானது சிதம்பரத்தில் உபநிஷத்துகளில் சொல்லப்பட்ட பரிசுத்தமானவும், ஒரே நிலையை யுடைத்தானதுமான பரப்பிரம்மம் உருவமற்றவராயும் விசேஷணமற்றவராயுமாகிறார்.

"சிலந்திப்பூச்சியானது தன் வயிற்றிலுள்ள நூலை வெளியே விடுவதுபோலவும், பூமியினின்று மரங்கள் அங்குரித்தல் (முளைத்தல்) போலவும், உயிருள்ள ஜீவராசிகளின் தேகத்திலிருந்து உரோமம் வளர்தல்போலவும், மாறுத சாசுவத நிலையிலிருந்து எல்லா உலகங்களும் உண்டாகின்றன" வென்று மண்டகோபநிஷத் கூறுகின்றது. சிதம்பரத்திலிருக்கிற ரகஸியத்தின் பொருளானது மேற்கூறப்பட்ட தத்துவத்தின் பொருள்தான். இந்த ரகசியப் பொருளானது ஒரு யந்திரரூபமாகவும், ரிஷிகளால் கிரந்தங்களில் சொல்லப்பட்ட உலகம் உண்டாவதையும் அழிவதையும் சூக்ஷ்மமாக விளக்குவதாக இருக்கிறது. இந்த யந்திரமானது சுவாமியானவர் சத்ரூபமாக இருக்கிறதாகச் சொல்லப்படுகிற கனகசபை அல்லது பொன்னம்பலத்திலுள்ள நடராஜ விக்கிரகத்தின் பின்னால் மகா பரிசுத்தமான சுவற்றில் ஒரே கல்லில் செதுக்கப்பட்டு கட்டப்பட்டிருக்கிறது. சுவாமியானவர் அழியாஞான ரூபமாகவிருக்கிறதாகச் சொல்லப்படும் சித்சபையானது கனகசபைக்கு அடுத்தும் அதற்கு எதிரிலும் உள்ளது. எல்லாவற்றிற்கும் காரணபூதமானதும், சர்வக்ஞமானதும், நிரதிசயானந்தமுமான பரப்பிரம்மம் சச்சிதனந்தம் என்று சொல்லப்படுகிறது. உலகத்துக்கு ஆகாசந்தான் எல்லை. இவ்வுலகத்திலுள்ள எல்லாப் பிராணிகளும் ஆகாசத்திலிருந்தே உண்டாயிருக்கின்றன. முடிவில் ஆகாசத்திலேயே லயிக்கின்றன (மறைகின்றன.) ஆகாசம் மற்றவைகளினும் மிகப் பெரிதாயிருக்கிறபடியால் அதுவே சகலத்திற்கும் ஓர் நல்ல இருப்பிடம். மோக்ஷத்தை விரும்புகிற பக்தர்கள் ஆராதிக்கிற சிதம்பரத்திலுள்ள கனகசபையும், ரகஸியமும் இந்த ஆகாசத்தில் வியாபித்திருக்கிற தென்பது ஐதீகம்.

மேற்கூறிய இரண்டு சபைகளைத்தவிர, இன்னும் மூன்று சபைகள் அங்கு உள்ளன. இவைகளில் முதலாவது நிருத்தசபை அல்லது நடனமண்டபம் என்னப்படும். சித்ஸபையானது எப்படி சுவாமியானவர் சர்வக்ஞர் என்பதைக் குறிக்கிறதோ அப்படிப்போலவே இந்த நிருத்த சபையானது சுவாமியானவர் இரகசிய மார்க்கங்களால் ஆக்கல், காத்தல், அழித்தல், சேர்ந்திருத்தல், கொடுத்தல் என்கிற ஐந்து செய்கைகளைச் செய்கிற இடைவிடாத நடனத்தைக் குறிக்கிறது. அதற்கு அடுத்தது தேவசபை. அங்கு தேவர்கள் வந்து மேற்படி நடனத்தை தரிசிக்கக்கூடுவதாக சொல்லப்படு

கிறது. ஐந்தாவதும் கடைசியானதுமான ராஜசபை கர்ப்பக்கிரகத்துக்கு வெளியிலுள்ள ஓர் ஆயிரக்கால் மண்டபம். இவ்விடத்தில் வருஷத்திற்கு இருமுறை ஆனிமாதம் உத்திரத்தன்றும், (இதற்கு 'ஆனித்திருமஞ்சனம்' என்று பேர். †), மார்கழிமாதம் திருவாதிரை நக்ஷத்திரத்தன்றும் நடராஜர் பூமிக்கு இராஜாதிபதியாகக் கொலுக்கொண்டு பிரஜைகளுக்கு தரிசனம் தந்து அடியார் தம் பிரத்தியக்ஷ நிலையை அறியும்படி செய்கிறாரென்பதும் ஐதீகம்.

இனி நடராஜ விக்கிரகத்தைப்பற்றி விசாரணை செய்யும்பொழுது நடராஜரென்றால் நாடகசாலைக்குத் தலைவர். உலகமே நாடகசாலை. நடராஜர் அதற்குத் தலைவர். நம்மால் பார்க்கக்கூடாத அவருடைய அற்புத சக்தியே அங்கு நாடகத்தை ஆட்டி வைக்கிறது. ஆத்மா என்கிற அறிவானது மனத்துக்கு உண்மையானகுருவாக விருப்பதுபோல நடராஜர் உலகத்துக்கெல்லாம் குருவாயிருக்கிறார். ஈசுவரனை அறியும் மார்க்கங்கள் இரண்டு. அவர் உளனுமாகியும் இலனுமாகியும், பார்க்கக்கூடியவராயும், பார்க்கக்கூடாதவராயும், சகளராகியும் நிஷ்களராகியும், குணராகியும் நிர்க்குணராகியும் இருக்கிறார். எல்லாவற்றிலும் ஆத்மா (அறிவு) ஒன்று இருக்கிறதனால், சுவாமியானவர் ஒருவரேயன்றி இருவரல்லாவிட்டாலும் எல்லாம் வெளியிலிருந்து வருவதாகத்தோன்றி அவரிடத்திலிருந்தே உண்டாகின்றன. எல்லாம் அவருக்காகச் சேர்த்துவைக்கவேண்டியதாயிருக்கிறது. நடராஜர் எங்கும் வியாபித்திருக்கின்ற சுவாமியாகிய உண்மைக் குருவின் உருவம். ஒருகாலத்தில் உண்மையான ஆத்மா ஒரு குருவாக நினைக்கப்பட்டிருந்தது. பிறகு அந்த குருவானவர் எதைக் கற்பிக்கிறாரோ அதென்று எண்ணப்பட்டிருந்தது. இந்தப் பிரத்யக்ஷமான உலகத்தில் நிதர்சனமானது கற்பனையைக்காட்டிலும் அதிகமாய்த் தெரிவிக்கின்றது. ஆகையால், நடராஜர் சகலவடிவமான அந்தக் குருவின் உருவம். அதற்கு அடையாளமான சப்தத்துக்கு அறிகுறியாக ஓர் சிறிய முரசத்தைத் தன் வலக்கையில் கொண்டிருக்கிறார். எல்லா உலகத்துக்கும் முதற் காரணமான நாதம் சப்தம், சுவாமியினின்று பிரிக்கப்படும் தன்மையதன்று. இரண்டாவது வலக்கையின் நிலையானது சாந்தத்தையும்ஆத்மஞானத்தைபடைந்தவன் அடையும்அமைதியையும் காண்பிக்கின்றது. இடதுகையில் பிரத்தியக்ஷமாய்த் தெரியும்படி ஜோதியான அக்கினியைத் தரித்துக்கொண்டிருக்கிறார். அது மத சம்பந்தமான உண்மைகள் நேரே அனுபவித்தலாலல்லாமல் வேறுவிதமாக அறியமுடியாதன வென்று காட்டுகின்றது. மனதைக்குறிப்பிக்கும்படி ஒரு மான்வடிவம் அவரது ஓர் பாதங்களினருகே இருக்கிறது. ஆத்மாவை மனதானது அறிவது மிகவும் இலகுவானகாரியமன்றென்று அம் மானுருவம் அவருடைய பாதங்களினருகே குறிப்பிக்கப்பட்டிருக்கின்றது. அவர் உடுத்துக்கொண்டிருக்கிற புலித்தோலானது, புலியைப்போல மூர்க்கமுங் கொடூரமுங்கொண்டு தோலை யுரித்தாலல்லாமல் வேறுவிதமாக நம்பத்தக்க தல்லாததாயிருக்கிற அகங்காரம் அல்லது மமதையைக் கொன்றதைக் காட்டுகின்றது. கழுத்தில் மாலையாகத் தரிக்கப்பட்டிருக்கிற ஸர்ப்பமானது மனிதர்களுடைய துரோகம் வஞ்சனைகளினின்றும் பரிசுத்தமாக்கப்பட்ட புத்தியை உணர்த்துகின்றது. அப்பாம்பினிடத்திலுள்ள விஷந்தான் புத்தியின் ஸ்வரூபம். தலைமேல் கங்கையை அதாவது சித்சக்தி அல்லது குளிர்

† தில்லை மூவாயிரவர்களில் ஒருவரான தீக்ஷிதர் ஆனிமாசம் 29உயிட்டுப் பின்வருமாறு எழுதியிருக்கிறார்: "ஸ்ரீ சபாநடேசர் ஆனித்திருமஞ்சனாபிஷேக விபூதிப் பிரசாதம் வருகிறது. தாங்களும் தரித்துக் கொண்டு தங்களைச் சேர்ந்தவர்களுக்கும் கிடைக்கச் செய்யவேண்டியது." விவேகசிந்தாமணியை வாசிப்போரெல்லாரும் நம்மைச் சேர்ந்தவர்களே யாதலால் அவர்கள் பொருட்டு ஸ்ரீ சபாநடேசர் (விபூதி) மஹாத்மியத்தைச் சுருக்கித் திரட்டிக் கூறியிருக்கிறோம்.

ச்சியோடு ஆயாசந் தீர்க்கத்தக்கதான ஞானத்தையும், சாசுவத வெளிச்சத்தையும் ஆத்ம சந்தோஷத்தையும் குறிக்கிற சந்திரனையும் தரித்துக்கொண்டிருக்கிறார். வலது காலானது மனிதர்களுடைய ஆசைகளும், பாவங்களுமே உருக்கொண்ட முயலகனென்னுமோர் அசுரனை மிதித்துக்கொண்டிருக்கிறது. இடது காலோ தன்னை யறிந்துக்கொள்ளும் துரிய நிலையைக் காட்டும்படி உயரத்தூக்கப்பட்டிருக்கிறது. துரிய நிலையாவது: மனிதனும் கடவுளும் சந்திக்கும் நிலைமை. அதாவது நடராஜருடைய திவ்விய சத்திருபமானது கீழே இறங்கி, மனிதனை யவருடைய உலகத்திற்கு அழைத்துக்கொண்டுபோய் அங்கு அவரோடு எப்பொழுதுமிருக்கும்படி செய்யும் நிலைமை. இந்நிலையானது நடராஜருடைய உயரத்தூக்கிய திருவடியானது மனிதபுத்தியினால் அடையக் கூடியவற்றையெல்லாம் அடைந்தபிறகு அவைகளையெல்லாம் விட்டு விட்டு, தன்னால் செய்யக்கூடிய எல்லா யோகசக்திகளுக்கும் மேலானதான நடராஜரின் திருவருளைப்பெற்ற பதஞ்சலியின் சிரசைத் தொட்டுக்கொண்டிருக்கிறதாக சொல்லப்படுகிறது. இப்படி நடனஞ்செய்கிற ஸ்தலமானது பூமிக்கு மத்தியெனச் சொல்லப்படும் தில்லைவனம். அது ஒருவனுடைய உருவத்தையும் உலகத்தினுருவத்தையும் குறிக்கின்றது. நடனசாலையானது மனிதர்களின் ஆசை, பெயர், உருவம் முதலிய உலகப்பற்றுகளெல்லாம் கொளுத்தப்பட்டு, புதியதாய் நடராஜரைப்பற்றிய பற்றுகளுண்டாகு மிடமாகிய சுடலை. இதுதான் துரிய நிலை. அதாவது அகப்பற்று புறப்பற்று இல்லாமல் உலகவின்பத்தினின்று நீங்கி ஆத்ம ஞானத்தை அடையும் நிலைமை. பரமகுருவான நடராஜர் தம்மைப்போலவே மனிதர்களையும், உலகவின்பங்களைக் கொளுத்திய சாம்பரின்மேல் நடத்தி நிரதிசயானந்தத்தை யடையும்வண்ணம் கற்பிக்கிறார்.

ஒருசமயத்தில் ஒரு பெரியவரை வேறொருவர் "சிதம்பரத்திற்கும்,மேலைச்சிதம்பரம் என்ற பேருருக்கும் உள்ள வித்தியாசமென்ன" வென்று கேட்க, பெரியவர் "கால்மாற்று," வித்தியாச முண்டென்றனர். சந்தேகிக்கு தன் சந்தேகத்திற்குமேல் மற்றொரு சந்தேகமும் தோன்றி மௌனமாயிருந்தார். பிறகு பெரியவர், "சிதம்பரத்தில் நடராஜர் வலதுகாலை முயலகன்மேல் இருத்தி இடக்காலை மேலே தூக்கி நடனஞ்செய்கிறார். ஆனால் மேலைச் சிதம்பரம் என்கிற ஸ்தலத்தில் இடக்காலை முயலகன்மேல் வைத்து வலது காலை மேலே தூக்கி நடனஞ்செய்கிறார். இதற்குத்தான் யாம் 'கால்மாற்று' வித்தியாசமென்று சொன்னோம்" என்றுகூறினர். இந்த மேலைச் சிதம்பரத்திலும் சிதம்பரத்தில் நடப்பது போல் ஆண்டில் இரண்டு தரிசனங்கள் நடக்கின்றன. ஆனால், நடராஜர் நடனஞ்செய்த விடம் வெள்ளியம்பலம், அல்லது வெள்ளியங்கிரி என்றும், அவ்விடத்திற்கு ஜனங்கள் போய்வருவது நிரம்பவும் கஷ்டமாக விருக்கிறபடியால், மேலைச் சிதம்பரமென்ற விடத்தில் நடராஜ விக்கிரகம் முதலியவைகள் பிரதிஷ்டைசெய்து கனகசபை நிருத்தசபை முதலியவைகளைக் கட்டி உற்சவங்களை நடத்திவருவதாகவும், வெள்ளியம்பலத்தில் நடராஜர் நடனஞ் செய்யும்பொழுது காலிலிருந்த ஒரு சதங்கை சிதம்பரத்தில் வந்து விழுந்ததாகவும், அதன்பிறகு அந்த விடத்தில் நடராஜர் பதஞ்சலி முனிவருக்காக நடனஞ்செய்து காட்டியதாகவும் சொல்லுகிறார்கள்.

வெள்ளியம்பலம் என்ற வெள்ளியங்கிரியானது கோயமுத்தூருக்கு மேற்கே இருபது மைலுக் கப்பாலுள்ள ஒரு மலை. மலையின்

பேரில் ஏறிச்செல்வதற்கு சரியான பாதை யில்லை. வெகு செங்குத்தான ஏற்றத்தில் ஏழு மைல் ஏறிச்சென்றால் காஞ்சிமகா நதியைக் கடந்து ஒருமைல் ஏறவேண்டும். இவ்விடத்தில் ஒரு பெரிய பாறையின் அடியில் பஞ்ச லிங்கங்களையும் காணலாம். இவ்விடத்தில் விம்பிதங்கள் பல. குகைகளுக்கு கணக்கு இல்லை. அனேக ரிஷிகளும் தபசிகளு மிருப்பதாக சொல்லப்படுகிறது. பஞ்ச லிங்கங்களுள்ள ஸ்தலத்தில் ஜனங்கள் இராத்தங்குவது வழக்கமில்லை. ஆண்டி காளை என்னப்பட்ட காஞ்சிமகா நதியின் கரையிலேயே ஜனங்கள் தங்கி லிங்கதரிசனஞ் செய்துக்கொண்டு திரும்புகிறார்கள். இவ்விடஞ் சென்றால் ஜனங்களுக்கு சொல்லமுடியாத ஆநந்தமுண்டாகிறது. மனிதர்கள் இயற்கைப் பொருள்களின் அமைப்பை யுள்ளதுள்ளபடி யறியவேண்டு†மானால் இவ்விடத்திற்குச் சென்று இந்த ஸ்தலத்தில் இரண்டு நாள் தாமதிப்பது அவசியம். கடவுள் இல்லையென்று சாதிக்கிற நாஸ்திகர்கள் இந்த ஸ்தலத்தை ஒரு தடவை தரிசிப்பார்களானால் உடனே அவர்கள் ஆஸ்திகர்களாய் மாறி பக்திமான்களாயவிடுவார்கள். இவ்விடத்தில் இராத்தங்குகிற பக்திமான்களுக்கு நடுநிசியில் தேவகானங்களும் வாத்திய கோஷங்களும் கேட்பதாக இன்னும் பலரால் கூறப்படுகிறது. இவ்விடத்தில் பளிங்கு மண்டபமொன்று பல்லாயிரம் கால்களுடன் இருப்பதாகவும், சாமானியர்கள் அவ்விடஞ்சென்றால் பெரிய வண்டுகள் அவர்களைத் துரத்தி யடிப்பதாகவும் கேள்வி. உயரமானவிடத்திலிருந்து இந்த மண்டபமுள்ள விடத்தை இன்னும் பார்க்கலாம். நான்கு பக்கங்களிலும் செங்குத்தான மலைகளால் சூழப்பட்டு, மா, பலா, கொய்யா முதலிய மரங்கள் நிறைந்த சோலைகளால் கவியப்பட்டு, துஷ்ட மிருகங்களால் நிறைந்துள்ள ஒரு மேட்டுப்பாங்கான மத்தியப் பிரதேசம். சுமார் ஒரு மைல் சமசதுரமிருக்கலாம். அனேக புண்ணியவான்கள் இவ்விடத்திற்கு சென்றதை பலர்பார்த்திருப்பதாகவும் திரும்பி வந்தவர்களைக் கண்டவர்கள் ஒருவருமில்லை என்றும் கேள்விப்படுகிறோம். அவ்விடத்தில் சென்று ஒன்றானவர்களுக்கு இவ்விடத்தில் என்னவேலை. இதுவே சிதம்பரமென்றும் அம்பலமென்றும் எண்ணப்படவேண்டும். இந்த ஸ்தலத்தை தரிசனஞ் செய்தவர்கள், திருவாரூர், ஜம்புகேசுவரம், காளஹஸ்தி, திருவண்ணாமலை, சிதம்பரம் என்ற பஞ்ச ஸ்தலங்களை தரிசித்தவர்களுக்கு சமானமாகிறார்கள். எவ்வாறெனில்:—இந்த ஸ்தலத்தில் மேற்படி ஸ்தலங்களிலுள்ள பஞ்சலிங்கங்களு மிருக்கின்றனவென்பதே.

---

† "My own experience in this realm of concrete Nature-study began in January 1901." My visit to பேரூர் was in 1895. "True Nature-study when guided wisely, must ever lead to an appreciation of God, which understanding constitutes the third element in a complete education. A knowledge of the value of such training will enable one to readily grasp the meaning embodied in the following lines."—

"Just as the birds all thankful sing,
As larks poise high on fluttering wing,
As swallows praise Him in their flight,
And flowers bloom towards the light;
And in the lovely early dawn,
A happy smile is on the lawn,
All things with a shout and song
Give forth thanks most glad and strong."—

*Nature study Review.*

"An appreciation of Nature is a direct channel to an understanding of God."—*Froelel.*

## "PEARLS OF FAITH"

SELECTED AND STRUNG TOGETHER FOR PARENTS AND CHILDREN TO WEAR.

*(From the Sayings of St. Vemanna.)*

ஆந்திரபாஷையில், பிரமக்ஞானியும், அருட்கவியுமாகிய,

வேமன்ன மகாகவி அருளிச்செய்த

பத்யங்கள்.

*(Fourth Series.)*

யோகிகளின் பெருமையைப் பக்தரே அறிவார்கள்.

1. வண்டறியுந் தேன்குவையின் வைப்பு மகரந்தமதெங்
குண்டெனநற் றும்பி யுவந்தறியும்—கொண்டைவிழி
ஆரணங்கே பத்திசெயு மன்ப ரறிவாரால்
தாரணையார் யோகிசெயல் தான்.

(இ-ள்.) தேன் மிகுதியாயிருக்கும் இடத்தையும் புஷ்பத்தின் வாசனையுள்ள இடத்தையும் வண்டுகள் அறிந்து சாருதல் போல சமாதியோகம் செய்யும் யோகிகளின் பெருமையை அவரிடத்துப் பத்தி செய்யும் அன்பர்கள் மாத்திரமே அறிவார்களன்றி மற்றவர்கள் அறியமாட்டார்கள்.

மனம் சலிக்காதவர்களே முத்தியடைவார்கள்.

2. பசித்தழலாற் காமமெனும் பற்றியெழுந் தீயால்
இசைத்திடுவெங் கோப வெரியால்—முசித்தழியா
தெந்நாணீ யோர்நிலையே சிந்தை யிருத்துவையோ
அந்நாளே முத்தி யறி.

(இ-ள்.) பசி காமம் கோப மென்னும் மூத்தழல்களாலேயும் மனம் தபியாமல் எப்போதொருவன் தன்மனத்தை ஏகாக்ரசித்தமாக ஆத்மசொருபத்தில் இருத்துகின்றானோ அப்போதே அவன் முத்தியைப் பெற்றான்.

மனோநிக்கிரகம் செய்யாமல் காயக்கிலேசம் செய்வதனால் பயனில்லை.

3. உடலை யொறுத்துமா யோகஞ்செய் வார்போல்
நடலைபுரி வாருளத்து நண்ணும்—வடுவகற்ற
வல்லாரோ புற்றின் புறத்தன்னை மாய்த்தக்கால்
உள்ளரவஞ் சாமோ வுரை.

(இ-ள்.) காயக்கிலேசம் செய்து மேலுக்கு யோகம் செய்பவர்களைப் போலக் கபடபாவனை காட்டுவோர்கள் மனக் குற்றம் நீங்கித் தூயராக மாட்டார்கள். வெளிப்புற்றைமாய்த்ததனாலே அப்புற்றினுள்ளிருக்கும் பாம்பு சாகுமா? சாகமாட்டாதல்லவா?

உள்தூய்மை யில்லாமல் வேடத்தால் மட்டும் பயனில்லை.

4. காவித் துணியுங் கமண்டலமு முண்டனமும்
மேவுமொரு பாடையும் வேடமும்—ஆவலுடன்
கொள்ளவரு தூய்மை குலவும் தலைக்கல்லால்
உள்ளமதற் குண்டோ வுரை.

(இ-ள்.) காவிவஸ்திரம் கட்டிக் கமண்டலம் கைபிடித்து தலை மொட்டையடித்துக் கொண்டு சந்நியாசிக்கு வேண்டிய வேஷமும் பாஷையும் கொள்ளுதலாலே என்ன பிரயோசனம்? தலையை மொட்டையடித்துக்கொள்ளுதலால் தலையழுக்கு நீங்கி சுவச்சமானதேயன்றி மனவழுக்கு நீங்கி நிர்மலமான துண்டோ? இல்லையே! என்றபடி.

ஞானமுள்ளவரே மேற்குலத்தவராவர்.

5. அஞ்ஞான முள்ளாரே கீழ்மக்க ளாரகத்தில்
மெஞ்ஞான முள்ளவரே வேதியர்காண்—எஞ்ஞானம்
கொண்டநாள் வான் மீகி கோதின் முனியானன்
ஒண்டொடிநீ மற்றீ துரை.

(இ-ள்.) அஞ்ஞானிகளே கீழ்க்குலத்தவராவார். ஞானமுள்ளவரே மேற்குலத்தவராவார். எப்படி யென்னின் வான்மீகிமுனிவர் முன்பு வேடனாயிருந்தும் பின்பு தமது ஞானத்தாலன்றோ மகாமுனியாகச் சிறந்தார்?

சற்குருசேவையினாலே முத்தியடைதலாம்.

6. காகத்தின் கூண்டிற் கதிக்கு மெழிற்குயில்போல்
வேகக் குளவியதாம் வெம்புழுப்போல்—பாகொத்த
செப்பவுளா யெந்நாளுஞ் சிற்குருவைத் தியானிக்க
ஒப்பில் குருத் தானு முணர்.

(இ-ள்.) காக்கையின் கூட்டில் இட்ட குயில்முட்டையானது காக்கைமுட்டைபோலவே பேதமின்றி யிருப்பினும் பின்பு பொரியும்போது குயிற் குஞ்சாக வெளிப்படுதல் போலவும், குளவியினால் ஊதப்பட்ட புழுவானது சதா அக்குளவியின் ஞனப்பாலே தன்னுருமாறிக் குளவியாதல்போலவும் சத்குருவையே சதாதியானித்துக் கொண்டிருப்பவன் தன் அக்ஞானமான அந்தக்கரணம் மாறி ஞானத்தைப்பெற்று சற்குருவைப்போலவே விளங்குவான்.

அஞ்ஞானம் நீங்கி மனம் நிர்மலமாதலே முத்தி.

7. மனவிருள்தான் றீரவுடன் மாமுத்தி யென்னத்
தனியறிவில் லாமற் றயங்கி—மனமாயைக்
குள்ளானர் போக உணருமனம் தாமானர்
தள்ளாத யோகரெனச் சாற்று.

(இ-ள்.) மனத்தில் உள்ள அஞ்ஞானம் நீங்குதலே முத்தியென்னும் ஞானமில்லாமல் அறிவு கெட்டு மனமாயைக்குள்ளாகி உழல்பவர்க்கு ஒருநாளும் முத்தியில்லை. அவ்வாறன்றி அஞ்ஞானத்தில் நீங்கி சித்தே தாமாகக் கண்டவர்களே மோட்சத்துக்குரிராகிய ஞானயோகியர் ஆவார்கள்.

சுகதுக்கங்கள் புண்ணிய பாவங்களால் உண்டாகும்

8. துன்புவரிற் றெய்வத்தைத் தூஷிக்கும் பேதையொழிந்
தின்புவரிற் றன்னை யினிதுவக்கும்—முன்புரிந்த
நல்வினையுந் தீமையுமே நாடிற் சுகதுக்கம்
பல்வகையாக் கூட்டுமெனப் பார்.

(இ-ள்.) அறிவில்லாத மூடன் துன்பம் வந்தபோது தெய்வத்தை நொந்துகொள்ளுவான்; இன்பம் வந்தபோதோ தானே அவ்வின்பத்துக்குக் காரணமாக எண்ணித்தன்னைப் புகழ்ந்து கொள்ளுவான். ஆயினும் யதார்த்தம் வேறு. நாம் முற்பிறப்பிற்செய்த புண்ணிய பாவங்களாகிய கன்மங்களுக்கீடாக இப்போது பலவிதமான சுகதுக்கங்களை அனுபவிக்கின்றோம். தெய்வம் நிமித்தகாரணமேயன்றி முதற்காரணம் புண்ணியபாவங்களேயாகும்.

பத்தியில்லாத பூசை பயனில்லை.

9. பண்டத்தாற் சேதம் பரியா விருந்தன்பு
கொண்டியற்றுப் பூசைமலர்க் குச்சேதம்—வண்டிமிர்பூங்
கோதையாய் தக்காருக் கீயாக் கொடைபொருட்குச்
சேதமா மென்றே தெரி.

(இ-ள்.) பரிந்திடாத விருந்துபண்டச்சேதமேயன்றிப் பயனில்லை. தக்கவர்களுக்குக் கொடுக்காத தானம் வீணுகப்பொருளுக்குத்தான் சேதம். அதுபோலவே பத்தியோடு செய்யாதபூசை பத்திரபுஷ்பங்களுக்குச் சேதமேயொழிய அதனல் எள்ளளவும் பயனில்லை.

மனோ நிக்கிரகம் செய்தல் அரிது.

10. மாற்ற மெளிது மனத்தை நிறுத்தரிது
கூற்ற மரிதுதாங் கொள்ளரிது—கோற்றொடியாய்
வாளேந்தல் யார்க்கு மெளிதாகும் வன்போருக்
காளாதன் மிக்க வரிது.

(இ-ள்.) வாயினுற்சொல்லுதல் எளிதாகும். மனத்தையோடாமல் ஒருநிலையில் நிறுத்துதல் மிகவும் அருமையாகும். பிறருக்கு அதைச்செய்தல்வேண்டும் இதைச்செய்தல் வேண்டுமென்று சொல்லுதல் எளிதாகும். அன்றிச் சொல்லியவண்ணம் தாமே செய்தலரிது. கத்தியைக் கையில்பிடித்தல் பிரயாசமன்று. உயுத்தகளத்திற் புகுந்துசண்டை செய்தலோ மிக அருமையாகும்.

உயிர்போகும்போது சுற்றத்தார் உடன் வரமாட்டார்கள்.

11. மக்களெங்கு வேட்ட மனையெங்கு மல்கியநல்
லொக்கலெங்கு நேசர்களெங் கொழியர்தாம்—தொக்கதெங்
காருடலம் விட்டேகம் மாவியெழ வந்தக்கால்
சாரலர்காண் தன்மை தெரி.

(இ-ள்.) உடலைவிட்டு உயிர் நீங்கும்போது மனைவிமக்கள் முதலான சுற்றத்தாராயினும் சிநேகிதராயினும் பரிசனங்களாயினும் நம்முடன் வரமாட்டார்கள், எல்லாரும் உயிருள்ளமட்டும் தான் நம்மைச்சூழ்ந்து கொண்டிருப்பார்கள்.

சிநேகமும் பகையும் நம்மாலே யுண்டாகின்றன.

12. நாம்பிறரை நேசித்தா னம்மையவர் நேசிப்பார்
நாம்பிறர்பா னேசந யப்பற்றாற்—றாம்பிறரும்
அற்றிடுவா ரல்லாம லாடம் பரத்தானும்
உற்றிடுவ தொன்று மிலை.

(இ-ள்) நாம் ஒருவரை நேசித்தால் அவர்களும் திரும்ப நம்மை நேசிப்பார்கள். நாம் நேசியா விட்டால் அவர்களும் நம்மை நேசிக்கமாட்டார்கள். ஆதலால் பிறரை நமக்குச் சிநேகமாக்கிக் கொள்ளுதற்கு அவரை நாம் சிநேகித்தலன்றி வேறே யாதுசெய்த போதிலும் பயனில்லை.

மனக் கோணலை நிமிர்த்த வழியில்லை.

13. சொற்கோட்ட முற்றாற் றுகளின் றறுத்திடலாம்
கற்கோட்ட மாறாலுங் கைசெயலாம்—விற்கோட்டம்
மானுநுத லாயிழைநன் மாதே மனக்கோட்டம்
தானகற்ற லில்லை தாம்.

(இ-ள்,) சொல்லிலுள்ள குற்றங்களைத் தக்கபடி போதித்துத் திருத்திவிடலாம். கல்வளைந்து கோணலாயினும் தக்கபடி வேலைசெய்து அதனை நீக்கலாகும். மனக்கோணலைமாத்திரம் நீக்க வழியில்லை.

காலமும் இடமும் ஆராயாமல் செய்யும் செய்கை வீணாகும்.

14. மெய்வருந்த லல்லால் விளையும் பயனில்லை
கைவருந்தக் குன்றின்மேற் கண்டிடலால்—செய்யபுனல்
ஊற்றெடுக்கும் பள்ளத்தே யோர்வாவி தோண்டினது
நாற்றிசைக்கு நல்கு நலன்.

(இ-ள்,) மலைமேல் கிணறுவெட்டுதலால் தேகப்பிரயாசமேயன்றி அதில் ஜலம் ஊறப்போகிறது மில்லை; ஒருவர்க்குப் பயன்படப்போவதுமில்லை. பள்ள நிலத்தில் வெட்டினால் சீக்கிரத்தில் ஜலமூறிப் பல்லோருக்கும் பயன்படும்.

ஏழைகளுக்கு ஏழைகளே உதவி செய்வார்கள்.

15. கண்ணில்லான் றன்னோடு காலில்லா னல்லுறவு
பண்ணியொரு வர்க்கொருவர் பற்றாகும்—வண்ணம்போல்
ஏதுமிலா வேழைக் கிரவலர்பற் றாயுறுவர்
தீதனையும் போது தெரி.

(இ-ள்.) குருடனும் முடவனும், சேர்ந்து ஒருவர்க்கொருவர் உதவியாக வழிநடத்தல் போல ஆபத்து வந்தபோது ஏழைகளுக்கு ஏழைகளே உதவியாவர்.

ஈயாத லோபியின் பொருள் எப்படியோ அழிந்துபோகும்.

16. இரப்போர்க்கொன் றீயாம லெப்பொழுதும் பொன்னை
நிரப்புற் றவன்போல நேடிக்—கரப்பிற்பின்

நல்லா யுரைத்தேன்கேள் நாடிப் புதைத்தநிதி
எல்லாம்போய் முற்று மிறும்.

(இ-ள்.) யாசகர்களுக்கு எள்ளளவேனும் கொடாமல் எப்போதும் திரவியத்தைச் சேர்த்துச் சேர்த்துப் புதைத்துவைக்கும் உலோபியின் பணம் பூதம் காத்துப் பயனற்றுப்போகும்.

சர்விகளின் இலக்கணம்.

17. கண்டிருந்துங் காணார் கருத்திற் செருக்குடையார்
கெண்டைவிழி! கேட்டிருந்துங் கேளாரே—பண்டையுரை
"காணுக்கண் கேளாச் செவியுடையார்" என்பதுதான்
வீணாத லில்லையது மெய்.

(இ-ள்.) கர்வமுடையவர் ஒருவரைக்கண்டபோதிலும் காணாதவர்போலவும் ஒருவர் வார்த்தையைக்கேட்டபோதிலும் கேளாதவர் போலவும் இருப்பார்கள். இவரைக்கண்பெற்ற குருடரென்றும் காதுள்ள செவிடர் என்றும் முன்னோர்கள் சொல்லியது உண்மையே.

இன்னின்னவை துன்பத்தைத் தருவன.

18. இன்னா கடன்கொள்ள லெத்தகையார்க் காணினும்
இன்னா விணக்கமறி வில்லாரோ—டின்னா
படினுரைத்த லென்றும் பணங்கொள்ள வேண்டிய
அடகுவைத்த லின்னா வறி.

(இ-ள்) கடன்வாங்குதலும், மூடர்களோடு சிநேகம்செய்தலும், பொய்பேசுதலும். அடகுவைத்தலும் துன்பத்துக் கேதுவாகும்.

நல்லவிடத்தில் விதைத்த வித்து வீண்போகாது.

19. வெண்மணியா மிப்பிமிசை வீழு மழைத்துளிதான்
தண்புனலில் வீழ்துளியோ தண்புனலாம்—மண்மேல்
விளைவுக் கிசைந்தவிடம் வீண்போகா வித்து
முளைகொண் டெழும்பயிராய் முன்.

(இ-ள்.) சிப்பிமேல் விழுந்த மழைத்துளியானது முத்தாகமாறும். ஜலத்தில் விழுந்ததோ ஜலமாகவேபோகும். அதுபோல பூமியில் சாரமுள்ள நல்ல இடத்தில் விதைத்த வித்து வீண்போகாமல் முளைத்துச் செழித்துப்பயிராகிப் பயன்கொடுக்கும்.

அறிவில்லார்க்குப் போதிப்பது அசாத்தியம்.

20. அறிவுடையார்க் கொன்றைத் தெரித்த லெளிதாகும்
அறிவிலருக் குத்தெரித்த லாகா—நறுநுதலாய்
ஏரிபதன் கோணல் நிமிர்த்த லெளிதாமோ
பாரிலித னுண்மை பகர்.

(இ-ள்.) புத்திசாலிகளுக்கு ஒன்றைப்போதித்த லெளிதாகும். மூடர்களுக்குப் போதித்தல் முடியாதாகும். குளம் குட்டைகளின் கோணலை நிமிர்த்திப்படித்துறை கட்டலாமேயன்றி கரைகடந்த ஏரியின் கோணலை நிமிர்த்த ஆர்க்கு வசமாகும்.

## CHARACTER SKETCH: THE STORY OF PROSCOVIA.

## குணவலி விளக்கம்: ப்ராஸ்கோவியாவின் சரித்திரம்.

(88-வது பக்கத் தொடர்ச்சி முடிவு.)

ப்ராஸ்கோவியாவுக்குத் துணைசேர்த்தனுப்பப்பட்ட மனிதன், அவளுடைய துரதிர்ஷ்டம், உடம்பு அசௌக்கியத்தினாலே காமா நதிக்கரையில் ஒரு கிராமத்தில் தங்கிவிட வேண்டியதாயிற்று. அதனால் அவள் மறுபடியும் துணையின்றித் தனியே விடப்பட்டாள். படவுகள் 'வால்கா' நதிமேல் எதிர்த்துச் செல்லும்போது அவற்றைக் குதிரைகள் கட்டிக் கரையோரமாக இழுத்துச் செல்லவேண்டி வரும். அவ்வாறு செல்லுகையில், சடிதியில் காற்றும் மழையுமாகப் பலமாயடிக்கப், படவு கரைமேல் மோதி உடைந்துபோகாமல் அதனைக் காக்கும்பொருட்டுப் படவுக்காரன் சுக்கானால் தள்ளும்போது அவ்விசையில் ப்ராஸ்கோவியாவையும் வேறிருவரையும் நதியில் தள்ளி விழ்த்திவிட்டான். அவர்களைத் தக்ஷணமே எடுத்துப் பிராணாபாயமில்லாமல்காப்பாற்றினபோதிலும், அங்கு நனைந்த உடையை மாற்றிக்கொள்ள மறைவிட மில்லாமையால் ப்ராஸ்கோவியா ஈரத்துணியுடன் இருக்க வேண்டி வந்ததனால் அவளுக்கு முன்னிருந்த அசௌக்கியம் பின்னும் அதிகரித்தது. மிலின் பெருமாட்டி தான் கூட்டியனுப்பின மனிதன் 'நிஜ்னி நவகரோடு'க்கு அவளைப்பத்திரமாகக் கூட்டிச்செல்வதேயன்றி, அங்கு நின்று மேலே செல்லுதற்குத் தக்க உதவிகளும் செய்வானென்று நம்பியிருந்ததனாலே, அவளுக்கு அவ்வூரில் வேறு சிபாரிசுக் கடிதங்கள் கொடுக்கவாவது அங்கு நின்று மேலே செல்லுதற்குரிய யோசனைகள் சொல்லவாவது இல்லை. அதனால் அப்பெண் மறுபடியும் துணையொருவர் இல்லாமல் நிர்க்கதியாக விடப்பட்டனள். ஆயினும் முன்னைக்கிப்போது ஒரு விஷயத்தில் பேதம் உண்டு. மிலின் துரைசானி அவளுக்கு வழிச்செலவுக்குப் பணங்களும், உடுத்தல் போர்த்தலுக்குரிய துணிகளும் வேண்டிய அளவில் கட்டிக் கொடுத்திருந்ததனால் அவ்விஷயமாக யாதொரு கவலையும் இல்லை. ஆனால் முன்னே தனக்கு இன்னம் இவ்வளவு தூரம் போக வேண்டுமென்றும் இத்தனை கஷ்டங்கள் அனுபவிக்க வேண்டுமென்றும் ஒன்றும் விவரம் தெரியாமல் இருந்தது. அன்றியும் பட்டணங்கள் என்றால் இவ்வளவு நடுக்கமும் முன்னில்லாமலிருந்தது. இப்போது அவ்விரண்டு விஷயங்களாலும் விசேஷ விசாரமும் பயமும் அவள் மனத்தில் குடிகொண்டிருந்தன. 'நவகரோடு'க்கு வந்து சேர்ந்ததும் தோணிக்காரன் அவளை வழக்கமாக இறக்கும் துறையில் ஒரு பாலத்தட்டில் இறக்கி விட்டனன். இறங்கினதும் தனக்கெதிரே ஓர் தேவாலயம் தோன்றக்கண்டு தான் தங்கியிருத்தற்கு ஒரு இடத்தைத்தேடு முன்னமே தன் வழக்கப்படி கடவுளை நோக்கிப் பிரார்த்தனை செய்யும்படி அங்கு சென்றனள். கோயிலுள்ளே ஒருவருமில்லையாயினும் அங்கு சன்னலுக்கப்பால் சிறிது தூரத்தில் தேவாரங்களைப் பாடிக்கொண்டிருந்த பெண்களின் தீங்குரல் அவள் காதில் விழுந்தது. அது பெண்துறவிகள் வாசமாயிருக்கும் ஓர் மடம். அங்கு பெண்களின் குரல் காதில் விழவும் அவளுக்கு மிகவும் ஆறுதலும் தேறுதலும் உண்டாயிற்று. அப்போது அவள் "சுவாமி கிருபையாலே என் மனோரதம் நிறைவேறப் பெறுவேனாயின் நான் இவர்களைப்போலத் துறவுபூண்டு கடவுளுக்குத் தொண்டுசெய்து துதித்துக்கொண்டிருப்பேன்" என்று தனக்குள்ளே ஓர் பிரதிக்ஞை செய்துகொண்டனள். பிரார்த்தனை முடிந்தபின் சிறிது நேரம்" பிரயாணிகள் தங்கும் சத்திரங்களுக்குச் செல்வோமாயின் அங்கு பலபேர் பலவிதமாகத் தன்னைக் குறித்துச் சொல்லத்தகாத வார்த்தைகளைச் சொல்வார்களாயின்

என்ன செய்வது என்று பயந்து அங்கு செல்ல மனமில்லாமல் தயங்கி நின்று பின்பு "நாம் கடவுள் கையில் நம்மை ஒப்பித்தபின் நம்பிக்கை யிழந்து சஞ்சலப்படுவது எவ்வளவு மதியீனம்" என்று தன்னைத்தான் நொந்து கொண்டு பின்னும் ஒரு முறை தனக்குப்பக்தியும் தைரியமும் அளிக்கும்படி பிரார்த்திக்கக் கோயிலுட் சென்றனள். அவ்விடத்தில் இருந்த ஒரு பெண்துறவி அவளைநோக்கி "அம்மா! கோயிற் கதவைச்சாத்தக் காலமாயிற்று" என்று சொல்ல ப்ராஸ்கோவியா கொஞ்சம் நெஞ்சைத் திடம்பண்ணிக்கொண்டு அவளிடத்தில் தனக்கு சத்திரங்களுக்குப் போய்த் தங்கப் பயமாயிருக்கிறதென்றும் மடத்தில் தானே இராப்பொழுது தங்கியிருக்க இடம் கொடுக்கவேண்டுமென்றும் கேட்டுக்கொண்டனள். அதற்கவள், "அம்மா! இவ்விடத்தில் பிரயாணிகள் தங்கும் வழக்கமில்லை ஆயினும் மடாதிபதியைக் கேட்டால் உனக்கு வேண்டிய ஏற்பாடுசெய்து கொடுப்பார்" என்றாள். ப்ராஸ்கோவியா தன் பணப்பையைக் காட்டி, "எனக்குக் காசுபணத்தால் யாதும் ஒத்தாசை வேண்டியதில்லை. ஏகத்ரினன்புரத்தில் மகாராஜி மிலின் பெருமாட்டி வேண்டிய பணம் கொடுத்தனுப்பி யிருக்கிறாள். நான் வேண்டுவதெல்லாம் ஒரு ராத்திரிக்குத் தங்குமிடமேயன்றி வேறில்லை" என்றனள். அத்துறவிப் பெண் அவள் பேச்சும் மாதிரியும் கண்டு சந்தோஷித்து அவளை மடாதிபதியினிடத்தில் கூட்டிச்சென்றனள். இம்மடாதிபதியும் அவர்களைப்போலவே பெண்தான். அம்மடம் பெண்களுக்சென்றே ஏற்பட்ட மடம். அங்கு கூட்டிச்சென்றதும் ப்ராஸ்கோவியாவின் களங்கமற்ற வார்த்தைகளைக்கேட்டு அனுமதிப்பத்திரத்தையும் மிலின் துரைசானி அவளுக்குக் கொடுத்திருந்த சிபார்சுக் கடிதங்களையும் பார்த்தபோது அப்பெண்களுக்கெல்லாம் அவளைப்பற்றி வெகு சந்தோஷம் உண்டாகியது. மடாதிபதியும் மிக்க பிரீதியோடு அவளைத் தன் அறையிலேயே படுத்துறங்கும்படித் திட்டம் செய்து மறுநாள் அவள் நதியில் வீழ்ந்ததனால் அவளுக்கு தேகம் அசௌக்கியப்பட்டிருப்பதைக் கண்டு அந்த ஸ்திதியில் போகக்கூடாது இன்னம் சிலநாள் தங்கியிருந்து உடம்பைச் சௌக்கியப்படுத்திக் கொண்டு தான் போகவேண்டுமென்று அவளை நிறுத்திக் கொண்டனள். அந்தச் சிலநாள்கள் கழியுமுன்னே ப்ராஸ்கோவியாவுக்கு அசௌக்கியம் மேலிட்டு வைத்தியர்கள்கூடப் பிழைத்தல் அரிது என்று அதைரியப்பட்டுக் கைவிடும்படியான நிலைமைக்கு வந்துவிட்டாள். ஆயினும் அவள் மாத்திரம் வியாதி அதிதீவிரமாயிருந்த காலத்தும் தனக்குப் பிராணாபாயம் உண்டாகும் என்று எண்ணவில்லை. "எனக்கு வாழ்நாள் முடிவு வந்துவிட்டதென்று நான் எண்ணவில்லை. கருணாநிதியாகிய கடவுள் நான் பட்ட கஷ்டங்களெல்லாம் வீணாக என் மனோரதம் நிறைவேறுமுன் என் பிராணன்போகப் பார்க்கமாட்டார், என்றுதான் நிச்சயமாய் நம்புகிறேன்" என்றனள். அவள் வெகுநாள் அவஸ்தைப்பட்டபோதிலும் கடைசியில். தான் எண்ணினபடியே சொஸ்தமடைந்தனள். கோடைகாலமெல்லாம் அதற்குள் சென்றுவிட்டது. பின்பு அவள் மிகவும் பலவீனப்பட்டிருந்ததனால் ஆட்டி அசைக்கும் மோட்டார் வண்டிகளில் பிரயாணம் செய்பச் சாத்தியப்படாதாதலின் பனிக்காலம் வந்து உரைபனி மீதே சக்கரமில்லாமற் சப்பரவண்டிகள் செல்லத்தக்க காலம்வரையில் அங்குதானே அத்துறவிப் பெண்களுக்கிடையில் இன்னம் சில நாளும் இருக்கவேண்டியதாயிற்று.

கடைசியில் அவள் ஒரு மூடு வண்டியில் ஏறி மாஸ்கோ நகரத்திற்கு பிரயாணமாகிச் சென்றாள். அங்கு மடாதிபதி தனக்குக் கொடுத்த கடிதத்தை எவருக்கு எழுதப்பட்டிருந்ததோ அந்தத் துரைசானியைக் கண்டு அவள் கையில் கொடுத்த அளவில் அத்துரைமகள் பீதர்புரியில் ஓர் ராஜகுமா

ரிக்கு தன் கைப்பட ஒரு கடிதம் எழுதிக் கொடுத்து அவளை ஒரு வர்த்தகனிடத்தில் ஒப்பித்து ஜாக்கிரதையாய் கொண்டு சேர்க்கும்படி அனுப்பினுள். இவ்விதமாக அவள் தான் இஸ்கிம்மிலிருந்து அரைரூபாய்க் காசும் கையில் தடியுமாகப் புறப்பட்டுப் பதினெட்டு மாதம் ஆனபிறகு தான் உத்தேசித்துச் சென்ற பீதர்புரிக்குக் கடைசியில் போய்ச்சேர்ந்தாள்.

ப்ராஸ்கோவியா பீதர்புரிக்குப் போய்ச் சேர்ந்தபின் தன்னைக் கூட்டிவந்த வர்த்தகன் வீட்டிலேயே தங்கியிருந்தாள். அவன் அங்கு ப்ராஸ்கோவியா நாடிவந்த ராஜஸ்த்ரீயைக் கண்டு பிடிப்பதற்கு முன்னமேயே ஏதோ தன் சொந்தக்காரியமாக ஊரைவிட்டுப்போக நேர்ந்தது. அவன் மனையாள் ப்ராஸ்கோவியா வீட்டில் பிரீதியாய் அவளை உபசரித்தபோதிலும் அவள் காரியசித்தியைப்பற்றி ஒன்றும் முயற்சி யெடுத்துக்கொள்ளவில்லை. அவள் பிராஸ்கோவியாவுக்கு சிபார்சு செய்யப்பட்டிருந்த துரைமகள் ஒருவளைக் கண்டு பிடிக்கப் பார்த்தபோது அத்துரைமகள் நீவா நதியின் மறுகரையில் இருந்ததனுலும், அப்போது பிப்ரவரிமாத மாதலால் அந்நதி உரைந்து கட்டியாகி பாதி உடைந்ததும் உடையாததுமாய்க் கடத்தற்கு அபாயகரமாயிருந்ததினுல் ஒருவரையும் கடந்து செல்லவிடாமல் கட்டுப்படுத்தப்பட்டிருந்ததனுலும் அவளைச்சென்று பார்க்கமுடியாமல் இருந்தது. அப்போது அவ்வர்த்தகன் வீட்டுக்குவந்த ஒருவன அவள் தகப்பனர் விசாரணையைத் திரும்பப் பார்வையிடும்படிப் பிரார்த்தனை செய்து மந்திராலோசனை சபையாருக்கு ஒரு மநுச்செய்துகொள்ளென்று அவளுக்குச்சொல்லி அம்மநுவை அவள் பொருட்டுத் தான் எழுதிக்கொடுப்பதாகவும் சொன்னுன். அவ்வாறே அம்மநுவைக் கையிலெடுத்துக்கொண்டு அப்பெண்மணி ஒருநாள் தப்பாமல் பதினைந்துதினம் ஆலோசனைசபையார் கச்சேரிவாயிலில் சென்று நின்று அங்கு யாரொருவர் ஆலோசனைசபையாரின் அங்கத்தரென்று தனக்குத் தோன்றுமோ அவர்களிடத்திலெல்லாம் அவள் கடிதத்தை நீட்டினள். ஒருவராயினும் அவளைப்பற்றி எள்ளளவாவது கவனம் வைக்கவில்லை. சிலர் கடிந்துபேசி அப்புறம் அகற்றினர். சிலர் அவளை யாசகத்துக்கு வந்தவளாக எண்ணி ஏதோ துட்டு துக்காணி கொடுக்க வந்தார்கள். அவ்வளவுதான்; வேறே பயனில்லாமற் போயிற்று. இதற்குள்ளாக கிறிஸ்து உயிர்த்தெழுந்த தினமாகிய ஈஸ்டர்தினமென்னும் பண்டிகைநெருங்கியது. அந்தப் பரிசுத்தமான வாரமுழுதும் ப்ராஸ்கோவியா தன் மனோரதத்தை நிறைவேற்றிக் கொடுக்கும்படிக் கடவுளை முழுவன்போடு சதா வேண்டிக்கொண்டிருந்தனள். அந்தப் பண்டிகை தினத்தில் அவள் என்று மில்லாத உற்சாகமும் மன எழுச்சியுமடைந்து தன்னை உபசரித்திருந்த அவ்வர்த்தகன் மனைவியோடு வண்டியேறி வெளிப் புறப்பட்டுப் போயினள். அப்போது அடுத்த தடவையில் தன் மநுவின் காரியம் நிச்சயம் பலிக்குமென்று தனக்கு உள்ளூறத் தோற்றியதாகச் சொல்லிக் கொண்டனள்.

அது கேட்டு வர்த்தகன் மனைவி, "உனக்கு வீண் பைத்தியந்தான். ஆலோசனையாவது சபையாராவது? அவர்களால் உனக்குக் காரியம் நிறைவேறுமென்று எனக்குத் தோன்றவில்லை. அவர்களுக்கு நீ மநுச் செய்துக் கொள்ளுவதைவிட அதோ பார்த்தாயா, அந்த இரும்பு விக்கிரகத்துக்குச் செய்துகொள்ளலாம்;" என்று அங்கிருந்த மகாபீத்தரின் உலோக விக்கிரகத்தைச்சுட்டிக்காட்டிச்சொல்லினள். அதற்குப் ப்ராஸ்கோவியா "ஆகா! கடவுள் சர்வ வல்லமையுள்ளவர். அவர் கிரு

பையுண்டானுல் அந்தலோகவிக்கிரகம் கூடத் தலை குனிந்து என் விண்ணப்பத்தைத் தன கையால் வாங்கிக்கொள்ளக்கூடும்" என்றனள். அதுகேட்டு அக்குலமகள் சிரித்துக் கொண்டனள். பின்பு அவர்கள் இருவரும் அவ்விக்கிரகத்தை உற்று நோக்குகையில் அங்கு நின்று நீவாநதியில் படகுக்கு பாலம் திரும்பவும் இடப்பட்டுப் போக்குவரவாயிருப்பது தென்பட்டது. உடனே அவள் ப்ராஸ்கோவியாவை அக்கரையில் அவள் காணவிரும்பிய துரைமகளிடத்திற் கூட்டிப்போவதாகச் சொல்லி அவ்வாறே சென்றனள். அத்துரைமகள் வீட்டில் இருந்ததுமன்றி அவள் வரவை எதிர்பார்த்துக் கொண்டுமிருந்தனள். அத்துரைமகள் ப்ராஸ்கோவியாவை வெகு அன்பாக உபசரித்து அவள் விண்ணப்பத்தைப் படித்துப்பார்த்து அது எப்படி எழுதி யாருக்கு விலாசமிட வேண்டுமோ அப்படியில்லாமல் தப்பும் தவறுமாய் எழுதப்பட்டிருந்ததென்றும் அதை ஒருவரும் கவனியாமற் போனது ஆச்சரியமல்லவென்றும் கூறினள். பின்பு தன் உறவினரில் ஒருவர் ஆலோசனை சபையில் உயர்ந்த வேலையில் இருப்பதாகவும் அவர் பார்த்தால் ப்ராஸ்கோவியாவுக்கு மிகுந்தசாதகம் செய்யக் கூடுமென்றும், அவள் துரதிர்ஷ்டம்! அவருக்கும் தனக்கும் அபபோது நல்ல சௌசன்யம் இல்லையென்றும் சொன்னுள்.

ஆனுல், 'ஈஸ்டர்' தினத்தன்று கிரேக்க மத சங்கத்தாரின் சம்பிரதாயப்படி பரஸ்பர மனஸ்தாபங்களெல்லாம் நிவிர்த்திசெய்து கொள்வது வழக்கம். அன்றைத்தினம் ஒவ்வொரு குடும்பத்தாரும் ஒருவரை யொருவர் சந்தித்து 'கிறிஸ்து உயிர்த்தெழுந்தார்' என்று ஒருவர் சொல்ல அதற்கு விடையாக 'ஆம் எழுந்தனர்' என்று மற்றவர் சொல்ல ஒருவரை யொருவர் முத்தமிட்டுக்கொள்ள அத்துடன் அவ்விஷயத்தில் நிகழ்ந்த மனஸ்தாபங்கள் எல்லாம் நீங்கிச் சிநேகிதமாவார்கள். ப்ராஸ்கோவியா அங்கு தன் சிநேகிதர்களோடு போசனம் செய்து கொண்டிருக்கையில் மேலே கூறிய கனவான் வழக்கமாகச் சொல்லும் அவ்வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டுவர உடனே அத்துரைமகள் ப்ராஸ்கோவியாவை அவனுக்குத் தெரிவித்து அவள் வரலாற்றையும் சொன்னுள். அவன் அவள் விஷயத்தில் மிக்க அநுதாபம் காட்டி ஆலோசனை சபையாருக்குத்தன் தகப்பன் குற்றத்தை மறுபடி விசாரிக்க மநுச்செய்து கொள்ளுதல் மிக்க காலதாமசத்துக்கிடமாகுமென்றும் கடைசியில் அவளுக்கு அநுகூலமான தீர்ப்புக் கிடைப்பதும் நிச்சயமில்லையென்றும் இவ்விஷயத்தைப் பற்றி நேரே அலக்ஸாந்தர் சக்கரவர்த்திக்கே மநுச்செய்து கொள்ளுதல் உத்தம மென்றும் சொன்னுன். ஆயினும் சக்கரவர்த்தியின் தரிசனம் எவ்வாறு பெறுவது? எவர் அவளை அவரிடம் கூட்டிச் செல்வார்கள்? இது விஷயமாக அவள் ஆலோசித்தபோது, சக்கரவர்த்தியின் தாயாராகிய மேரி சக்கிவர்த்தினியின் பிரதான காரியதரிசியாகிய ஒருவரைப் போய்ப்பார்த்தால் அக்காரியம் நிறைவேறும் என்று ஒருவர் சொல்ல அப்படியே அவரிடம் சென்று அவர் மனையாளின் தயவினுலே அவருடைய பிரீதியைச் சம்பாதித்து அவர் தயவினுலே சக்கரவர்த்தினியின் தரிசனம் பெற்றுள்.

இந்த மேரி சக்கிரவர்த்தினி மிகவும் தயாள குணமுள்ளவர். பெருமிதம் பாராட்டிக் கொள்ளாதவர். மகா பரோபகாரி. சாந்த குண சீலர். இவர் ப்ராஸ்கோவியாவை மிகவும் அன்போடு வரவேற்று அவள் வரலாற்றைக் கேட்டு ஆனந்தித்து அவளது சுயநயம் வீட்டுப் பாநயம் பாராட்டும் சிறந்த குணத்

துக்காக அவளை வெகுவாக மெச்சித் தாம் அவளைச் சக்கிரவர்த்தியினிடம் கூட்டிச் சென்று அவள் மனோரதத்தை நிறைவேற்றி வைப்பதாக வாக்களித்து அவளுக்கு சொந்தச் செலவுக் குபயோகமாகும்படி முந்நூறு ரூபாய் ரொக்கமும் வெகுமதியாக அளித்தனர். ப்ராஸ்கோவியாவுக்கு அச்சமயத்தில் பிறவிக் குருடனுக்கு இருகண் கிடைத்தது போலவும் நித்தியதரித்திரனுக்குப் பெருநிதி கிடைத்தது போலவும் அளவற்ற ஆனந்தம் உண்டாகி அவ்வானந்த மேலீட்டால் தேகம் பரவசமானாள்.

இரண்டு தினம் கழித்து சக்கிரவர்த்தினியால் சக்கிரவர்த்தியிடம் அழைத்துச் செல்லப் பெற்று சக்கிரவர்த்தியின் தரிசனம் பெற்று, தன் தந்தையின் விடுதலையைப் பெற்றதுமல்லாமல் வேறு தன் சிநேகிதர் சிலாரது விடுதலையையும் பெற்றனள்.

இவ்வாறு தான் மேற்கொண்ட காரியம் தெய்வாநுகூலத்தால் நிறைவேறினதினால் பிராஸ்கோவியா மனம் களித்து முன்பு தான் நிச்சயித்தபடியே தன் வாழ்நாள் வீணாமல்கடவுளின் கைங்கரியத்தில் செலுத்த எண்ணி துறவு பூண்டு நிஷ்னிநகர் மடத்தில் பெண் துறவிகளோடு கூடியிருந்து தவம் செய்து கொண்டிருந்தனள். அவளது தேகம் அவள் பட்ட அநேக வழி வருத்தங்களால் தளர்ந்து அசௌக்கியப் பட்டு பின்பு சிலவருஷங்களுக்கெல்லாம் மரணமடைந்து பரலோகத்தை அடைந்தனள்.

முற்றும்.

---

## EASY LESSONS IN ECONOMICS.

## DIVISION OF LABOUR.

## அர்த்த சாஸ்திரம்.

### உத்யம விபாகம்.

---

ஒரு ஜனஸங்காதத்தின் உத்யமத்திற்கு ஸஹகாரியாயிருப்பதில் இரண்டாவது, உழைப்பைப்பற்றிய சிலவிதமான கட்டுப்பாடுகள் என்று முந்தியுரைத் திருக்கிறோம். இதற்கு உத்யம விபாகம் (Division of Labour) என்று ஸாதாரணமாய் பெயர் வழங்கி வருகிறது. ஆனால் இந்த வாசகம் இவ்வளவு திருப்திகரமானதல்ல. இப்பெயரால், தனோத்பத்திவிஷயமாக ஜனங்களின் ஏகீபூதமான வியாபாரங்கள், உத்பத்தியில் பிரயோகிக்கப்படும். பல ஸாதன விசேஷங்கள், விருத்தி வித்தியாசங்கள் முதலியவை பொதுவாகக் குறிக்கப்படுகிறபடியால் உழைப்பின் கட்டுப்பாடுகள் (Organization of Labour) என்னும் வாசகமே தகுமாயிருக்கும். ஆயினும் வழக்கத்தில் வந்த வாசகத்தை விட்டுவிடுவது அசாத்தியமாதலால் உத்யம விபாகம் என்பதைக் குறிச்சொல்லாக இந்த அருக்தத்தைக் குறிக்க வைத்துக் கொள்ளுவோம்.

நாகரிகமில்லாத ஜனஸமூகங்களில் மேற்கூறிய உத்யம விபாகம் விசேஷமாய்த் தென்படுகிறதில்லை, ஒவ்வொருவனும் தனக்கு வேண்டிய வேலைகளனைத்தையும் தானே செய்து கொள்ளுகிறான். ஆதிகாலத்தில் ஒவ்வொருவனும தனதுடைய குடிசையைக் கட்டிவைக்கிறதும, தனது வில்லம்புகளை ஸித்தப்படுத்தி வைத்துக்கொள்ளுதலும், தன்னுடைய மாடுகளைப் பார்த்துக் காத்தலும் ஆகிய அக்காலத்திய வியாபாரங்களெல்லாவற்றையும் தானேதான் செய்துகொள்ள வேண்டியிருந்தது. ஆயினும் இங்கேயும் ஆண்பெண்ணெ

ன்ற வித்தியாசத்தின்பேரில் ஸ்திரீகள் கிருத்ய மின்னதென்றும், புருஷர்களது தொழிலின்னது என்றும் விபாகம் ஏற்பட்டிருக்கலாம். இப்படி சிலகாலம் சென்ற மேல் லிங்க வித்தியாசத்தின் பேரிலின்றி ஸாமர்த்தியத்தை யனுசரித்தும் உத்யம விபாகம் ஏற்படுகிறது. இப்படிப் பிறந்த உழைப்பில் முதலானது கம்மாளன் தொழில். ஆதியில் அவன், இரும்பு, கல், மரம் இவைகளில் பொதுவாக வேலைசெய்யத் துவங்கி, மற்றவர்களது உதவியைத் தான் அவர்களுக்குச் செய்துகொடுக்கும் ஸாமான்களிற் குப்பதிலாகப் பெற்றுக் கொண்டான். இப்படிச்செய்யும் வேலை நாளாவட்டத்தில் அதிகமாக, கம்மாளன் மூவகைத் தானகப்பிரிந்து, இரும்பு வேலைக்குமாத்திரம் ஒருவனும், மர வேலைக்குத் தச்சனும், கல் கொத்துவதற்குக் கொத்தனுமாக மாறுகிறான். இப்படியே மற்றும் சுதேச வியாபாரங்கள் உதிக்க பல விதமான தொழில்களும் அவைகளுக்கு வேண்டிய தொழிலாளிகளும் உத்பத்தியாகிறார்கள்.

உத்யமவிபாகத்தால் தனோத்பத்தி யெப்படி உபகரிக்கப்படுகிறது என்பதைச் சற்று யோசித்து பார்ப்போம்.

(1) வேலையைக் கற்றுக்கோள்வதற்காகக் கழியும் காலம் குறைகிறது.—ஒருவன் ஒரு வேலை ஸம்பந்தமான ஸகலவியாபாரங்களேயும் கற்றுக் கொள்ளவேண்டுமானாலும் அல்லது பல வேலைகளைக் கற்றுக்கொள்ளவேண்டு மானாலும் வெகுவானகாலம் செலவாவதுடன் பல பதார்த்தங்களையும் காரண ஸாமக்கிரியைகளையும் அழித்து நாசம் செய்யவேண்டியிருக்கிறது. ஆனால் ஒரு வேலையைமாத்திரம், அல்லது ஒரு வேலையைப்பற்றிய ஒரு பரிகர்மத்தை மாத்திரம் அவன் கற்றுக்கொள்ள வேண்டுமென்றால், சீக்கிரம் தகுந்த பயிற்சியடைந்து விடலாம்.

(2) வேலையாட்களின் கைத்திறத்தை யதிகரிக்கிறது.—ஒரு வேலையைப் பலதடவைகளில் செய்வதால், நன்றாகக் கற்றுக்கொண்ட வேலையைச் செய்வதிலும் வேலையாள் பிரபலமான ஸ்வாதீனத்தைப் பெறுகிறான். அந்தந்த வேலையைப் பற்றிய கர்மேந்திரியங்கள் அத்புதமான தேர்ச்சியை யடைகின்றன. அங்கங்கே வேண்டிய அங்கப் பிரத்யங்கங்களும் ஸ்நாயுக்களும் பருத்து பலமடைந்து விசேஷமாக வேலைசெய்யக் கூடியவை யாகின்றன. காசுக்கடைக்காரன் எவ்வளவு சீக்கிரம் பணத்தை யெண்ணுகிறானென்பதையும் மின்தந்தி வேலையில் நியமிக்கப்பட்டவன் எவ்வளவு சுலபமாக ஸமாசாரத்தை யறிவிக்கவும் அறியவும் வல்லவனாக விருக்கிறானென்பதையும் ஊகித்துப் பார்ப்போர்க்கு அப்பியாசத்தால் உத்யம் லாகவம் எவ்வளவு உண்டாகலாம் என்பது நன்றாக விளங்கும்.

(3) ஒரு வேலையினின்றும் இன்னொரு வேலைக்குப்போவதினால் நேரிடும் காலநஷ்டம் குறைகிறது.—ஒருவன் ஒரு வேலையைச்செய்யவேண்டுமானால் அதற்குவேண்டிய ஸஹாய ஸாமக்கிரியைகளையெல்லாம் ஸித்தம்செய்து கொண்டுதான் ஆரம்பம் செய்ய வேண்டியிருக்கிறது. ஆகவே ஒரு வேலையைத்துவக்கி ஒரு ஸாமானைச் செய்தானால், மற்றொரு ஸாமானைச் செய்ய முன்சென்ற காலத்தில் கால்வரிசை கூடச் செல்லாது. ஆனால் வேலைக்காரன் முதல் ஸாமான் ஆனதும் ஆகாததும் அதைப் போட்டுவிட்டு, வேறொருவேலைக்குப் போனால் அதற்குவேண்டிய உபகிரியைகளையெல்லாம் செய்துவிட்டு அதைத் துவக்கி முடிப்பதற்குள் வெகு காலமாய்விடும்: மேலும் மறுபடியும் பழைய வேலைக்கு வந்தால் இது எல்லாம் சிதறிப்போய் முன்போலவே ஸாதனங்களைச் சேகரிக்கக் காலம் வேண்டியிருக்கும். மே

னும் ஒரு காரியத்தை விட்டதும் விடாததும் நேராகச் சட்டென்று மறுகாரியத்திற்குப் போவது ஸுலபமல்ல. மனிதனுக்கு ஆலஸ்யம் ஸாமானியமானது. சோம்பேரித்தனத்துடன் அங்குமிங்கும் கொஞ்சம் நின்று நிழலாடிவிட்டுப் போவது மனிதனுக்கு இயல்பு. ஆகவே ஒருவன் ஒருவேலையினின்றும் மற்றொரு வேலைக்குப்போகத் தட்டுப்பட்டுக்கொண்டிருந்தால் இப்படிசோம்பேரித்தனம் கொஞ்சம் கொஞ்சமாகப்பழகி வேலையின்பேரிலுள்ள அபிருசி நீங்கிப்போய்விடும்.

(4) யந்திர தந்திர நிர்மாணங்களை ஸாத்தியமாக்குகிறது.—இப்படியாகப் பிரிக்கப்பட்டுத் தொழில் நடந்தால் ஒவ்வொரு பாகமும் நன்றாகச்செய்யப் படுகிறது. அந்தந்தப்பாகம் எப்படி ஸுலபத்தில் சேர்த்தியாக நடக்கும் என்று அதில் பொறுப்புள்ள வேலைக்காரன் பார்த்துச் செய்விக்கிறான். ஆகவே இப்படி வேலையைக்குறைத்து, பலபெயர்கள் செய்யும் வியாபாரத்தைச் சில மனிதர்களைக் கொண்டே செய்வதற்கான பலவித யந்திரங்கள் கண்டு பிடிக்கப்படுகின்றன. ஆயினும் பெரும்பாலும் யுக்தியால் யந்திரநிர்மாணம் செய்வோர் வேலையில் ஏற்படுத்தப் பட்டிருக்கும் வேலையாட்களல்ல. இதற்கு வெகுவான சாஸ்திரப்பயிற்சியும், புத்திநுட்பமும் வேண்டியிருப்பதால் இதைச்செய்ய வென்றே உத்யம விபாகத்திற்கேற்கச் சில வித்வான்களும், புத்திசாலிகளும் தங்கள் ஆயுள்நாள்முழுதும் இதிலேயே பரிசிரமிக்கிறார்கள்.

(5) இதனால் ஏதாவது அங்கஹீனர்களாகவிருக்கும் ஜனங்கள் கஷ்டமில்லாமல் தத்தம் ஜீவனத்தை ஸம்பாதிப்பதுடன், ஜனஸமூஹத்திற்கும் செல்வத்தை யுண்டாக்கிவைக்க இடமாகிறது. மேற்கூறிய உத்யம விபாகம் உழைப்பாளிகளைப் பற்றியது மாத்திரம் அல்ல. பிரத்யேகமான ராச்சியங்களும், ஜனஸங்காதங்களும் தத்தம்தேசத்தின் சீதோஷ்ணஸ்திதி, ஜனங்களின் குணம் ஸாமர்த்தியம், பூமியின் ஸ்வபாவம் இவைகளை யனுஸரித்து ஒவ்வொரு விதமான உத்யமத்தை மாத்திரம் விசேஷமாய் அபிவிருத்திக்குக் கொண்டு வந்திருக்கின்றன. இப்படியாகப் பிரியும் உழைப்பிற்கு ஸமுதாய விபாகம் என்னும் பெயரைக் கொடுப்போம் (Territorial Division of Labour). இதற்கு ஜேவன்ஸ் என்னும் செல்வநூலாளர் (Local Adaptation) "தேசானு குணமாக வுத்யம ஆதானங்கள்" என்று பேரிட்டிருக்கிறார். இதனால் தான் ஒரு தேசத்திலிருந்து இன்னொருதேசத்திற்கு வர்த்தகம் ஏற்படுகிறது. எங்கெந்தப் பதார்த்தங்கள் எந்த தேசத்தில் சுலபமாயும், ஏராளமாயும் உத்பத்தியாக்கப்படலாமோ அங்கங்கேயே யவைகளை உண்டாக்கிக்கொண்டு மற்றைய தேசங்களுக்கு ஏற்றுமதிசெய்வதினால் வெகு பயனுண்டு. ஸாமான்களும் சுலபமான விலைக்குக்கிடைக்கும்; பலதேச ஸஞ்சாரத்தினாலும், ஒரு தேசத்தாருடன் மற்றொரு தேசத்தார்சேர்ந்து நடப்பதினாலும் நாகரிகத்தை யபிவிருத்தி செய்யப் பல வித ஸஹாயமேற்படுகிறது.

மேற்கூறிய உபயோகங்களைத் தவிர உத்யம விபாகத்தினால் வேறு இரண்டு அனுகூலங்கள் உண்டென்று ஜேவன்ஸ் என்பவர் கூறியிருக்கிறார்.

(1) ஸஹாயவிஸ்திருதி (Multiplication of Services).

அதாவது ஒருவனுக்காவது, அல்லது ஒரு தடவையாவது செய்யப்பட்ட வேலை பலருக்கும் பலகாலத்திற்கும் உபயோகமாவது. இதற்கு நிதர்சனமாகத் தபால் ஆபீஸ் முறைமைகளைக் கூறுவோம். ஒரு கடிதத்தை ஓரிடமிருந்து இன்னோரிடத்திற்குக் கொண்டுபோக நியமிக்கப்பட்ட சேவகன், ஆயிரம் காகிதங்களை அந்த விடத்திற்கு யாதொரு விசேஷ சிரமமில்லாமல் கொண்டுபோகலாம்.

(2) பிரதிரூபவிஸ்திருதி (Multiplication of Copies).

இதற்கு நிதர்சனமாக அச்சு யந்திரத்தை யெடுத்துக் கொள்வோம். ஒரு புஸ்தகம்

வரையவேண்டுமானல் அதிக செலவாகும். ஆயிரம் கிரந்தத்திற்கு, அதாவது 32,000 அக்ஷரத்துக்கு ஏறக்குறைய மூன்று ரூபாய் கொடுத்து ஸம்ஸ்கிருத புஸ்தகங்களை வரைய வைப்பது வழக்கமாகிறது. அப்படியானல் சுமார் 30-பக்கமுள்ள புஸ்தகத்திற்கு மூன்று ரூபாய் வேண்டிவருகிறது. ஆனல் இக்காலத்தில் 300-பக்கமுள்ள புஸ்தகம் மூன்று அணுவுக்குக் கிடைக்கிறது. இப்படி விலை ஸஹாயமானதற்குக் காரணம் பிரதிரூபவிஸ்திருதியினுல்தான். ஒரு தடவை அச்சுரூபமாகக் கோர்த்தமேல் அதன் பிரதிரூபத்தை யெத்தனை தடவை வேண்டுமானுலும் காகித முதலான தகுந்த ஸாமக்கிரியைகளில் கொள்ளலாம்.

இப்படியாக உத்யம விபாகத்தில் பலவித நன்மைகள் உண்டான போதிலும், இவ்விபாகம் மிகவும் ஸூக்ஷ்மமாகப் பரவிவிட்டால் சில தீங்குகளும் நேரிடும். ஆயினும் நன்மைகளபேக்ஷயாக இந்த தோஷங்கள் அவ்வளவு பலத்தவைகளல்ல.

(1.) வேலைக்காரனது காரியமெல்லாம் ஒருவியாபாரத்தில் மாத்திரம் இருப்பதால் அவனது கைலாகவம் குறைந்துபோய் அவ்வியாபாரத்தைத்தவிர மற்ற விஷயங்களில் மூடனுகிறுன். ஒருவனது காலம் முழுதும் குண்டூசிக்குத் தலைகட்டிவைப்பதில் மாத்திரம் சென்றுல் அவன் வேறு என்னகாரியத்திற்கு உதவப்போகிறுன். ஆகையால் இவ்வேலைக்காரன் ஏதோவொரு காரணத்தால் தனக்கு வரும் வேலையை நடத்தக்கூடாமல் போனுல் இன்னது செய்வதென்னத் தெரியாது திகைக்கிவிடுகிறுன். புதிதான தேசங்களுக்குப் போனுல் அதற்கு வேண்டியபடி தன்னுடைய வேலையை மாற்றிக்கொள்ள அவனுல் முடிகிறதில்லை.

(2.) இதனுல் கைத்தொழில் மிகவும் சிக்குமுக்காக ஸூக்ஷ்ம மாகிவிடுகிறது. அதனுல் ஏதாவது ஒரு காரணத்தால் ஒருவித வியாபாரம் லாபம் கொடுக்காவிட்டால் அதை விட்டுவிட்டு அதில் வியாபிருதர்களான வேலையாட்கள் வேறொன்றுக்குப்போக முடிகிறதில்லை. அதனுல் ஜனங்கள் தாரித்திரியமதிகரித்து அதிருப்தியும் கஷ்டமும் மேலாகி இராச்சியத்தைச் சிதறடிக்கத் தகுந்த எண்ணங்களையும் நடத்தைகளையும் உடையவராக ஆகிறுர்கள்.

## CHILDREN'S PAGE ON LAZINESS.

### சிறுவர்க்கான பக்கம்.

[விவேகசிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

### சோம்பேரித்தனம்.

"Life is strenuous: The lazy suffereth death unto life."

இல்லாமை சோம்பேரிக்கு உரியது: விசனத்தைத்தவிர வேறொன்றும் அவனுக்கு உண்டாவதில்லை.

சோம்பேரித்தனம் சரீரத்துக்கு ஒரு பெரிய வியாதி. எப்படியென்றுல் அதனுல் மிகுந்த பாபமும், விசனமும், தொந்தரவும் உண்டாகின்றன.

முதலாவது: உடம்பு வணங்காதவன் பிறரிடத்தில் பொய் சொல்வதற்குப் பின்வாங்க மாட்டான். அதற்கு திருஷ்டாந்தமாக யாராயினும் அவனை பலான மனிதனிடத்திற்கு போய்வரும்படி சொன்னுல் உடனே அவன் வீட்டிலில்லையென்று சொல்லிவிடுகிறுன். யாதாயினும் ஒரு வஸ்து கொண்டுவரும்படி சொன்னுல் அது அகப்படாது எனக்குத்தெரியும் என்று சொல்லுகிறுன்.

இரண்டாவது: சோம்பேரி தனக்கு உத்ஸாகமாயிருப்பதைத்தான் அனுசரிப்பான். வேலைக்கு அருகனல்ல. எப்பொழுது தன் வேலையை செய்கிறதில்லையோ, அவன் சொத்தும் சௌக்கியானுபவங்களும் நாளுக்குநாள் குறையும். கடைசியில் துஷ்டத்தனத்துக்கே அருகனுகிறுன்.

மூன்றுவது: சோம்பேரிகள் பிறரை ஆசிரயித்து அவர்களுக்குக் கீழ்ப்படிந்திருப்பார்கள். ஆகையினுல் அவர்களடையக்கூடிய வஸ்து சமீபத்திலிருந்த போதிலும் பிறருதவியில்லாமல் அது அவர்களுக்குக் கிடைப்பதில்லை.

ஆனதினுல் ஒவ்வொருமனிதனும் தன் அந்தஸ்துக்கு சம்பந்தமான வேலையில் முயற்சியுடன் பிரவர்த்திக்கவேண்டியது.